"Seek Truth wherever you can findh it," But, "Make your hoice and stick to it till you reach the End."

ஸத்யம்வத.—Speak the Truth.

"Hitch your Wagon to a Star."

"To Thine own Self be True."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] God is Love : Knowledge is Power : Om.

ஸத்யமேஜெயம்—Satyameva Jayati.

புத்தகம் 12.] 1903-ம்ஹு நவம்பர்மீ [இலக்கம் 7.

# Godward Ho! A symposium

## Or, Atmavidyamanjari.

## ஆத்மவித்யாமஞ்சரி.

ஆத்மவித்தையாவது ஆத்மஞானமேயாம். ஆத்மவித்யாமஞ்சரியென்றால்ஆத்மஞானத்தைத்தரும் பூங்கொத்துக் கொப்பான நூற்றிரட்டு என்னப் பொருள்படா நிற்கும். ஆத்மானுபவத்தைப் பற்றிச் சொல்லும் ஞானநூல் என்று கொள்ளினும் பொருந்தும். இதுகாறும் விவேக சிந்தாமணியில் அப்போதப்போது வெளியாய் வந்த ஆத்மவித்யா சம்பந்தமான பாகங்களைத் திரட்டித் தனியாகச்சேர்த்து வெளியிட்ட புஸ்தகமொன்று "ஸத்யானந்த சபையின்" நோக்கம் நிறைவெய்துமாறு ஆனந்தகைங்கரியமாக மேற்படிசபைக்காக "ஸத்யானந்த சாந்தசர்மா" அவர்களால் பிரத்தியேகமாக வெளியிடப்பட்டு நமது பார்வைக்கு வந்திருக்கிறது. இதில் அடங்கிய ஒவ்வொரு பக்கமும் **விவேகசிந்தாமணி**யில் வெளியானதே. அதைப்பற்றி நாமே மறுபடியும் அபிப்பிராயம் சொல்லப்புகுவது சரியல்லவென்று தோன்றும். ஆனால் நாம் இங்கு அதைப்பற்றி யாதொரு அபிப்பிராயமும் சொல்ல நினைக்கவில்லை. அது விவேகசிந்தாமணியில் வெளியானதேயாகிலும் விவேகசிந்தாமணியில் வெளியிட வேண்டுமென்று எழுதப்பட்டதல்ல. உலகவாசனையிலுழன்று ஆடியலுத்துச் சலித்த ஒரு ஜீவாத்மா, வியவகாரதசையில் சுற்றிச் சுழன்றுழைத்துத் தன் மனோரதமெல்லாமீடேறியும் வெகு காலமாகப் பலதுறையிலும் தேடித்திரிந்து பிடிக்

கப்பார்த்த ஆனந்தம் "கொள்ளிவாய்ப் பிசாசு" என்று சாதாரண ஜனங்கள் சொல்லும் மாயா வெளிச்சம்போல் தோன்றித் தோன்றி மறைவதும், இதோ கைக்கெட்டிவிட்டதுபோல் தோன்றி தொலைதூரத்தில் எட்டாக்கையிலிருப்பதாகக் காட்டுவதுமாக இப்படி ஆளைப்போட்டலைக்கவிழுத்து வதைப்பதைக் கண்டு "ஓஹோ! இது பொய்த்தோற்றம். இந்த வெளிச்சத்தை நம்பினது மோசமே!" யென்று ஸ்வானுபவரீதியாக உள்ளத்தில் தோன்றின உண்மையை உறுதியாகக்கொண்டு, "அடடா! இதுகாறும் உழைத்துப்பாடுபட்டதெல்லாம் விழலுக்கிறைத்த நீர்போல் நமது ஆயுள் வீணில் கழியக் காரணமாயிற்றேயன்றி வேறு சாசுவதமான பிரயோஜனமொன்றையுங் கண்டிலேம். சீ! சீ! இந்த ஜன்மம் பாழ்த்தது! இனியும் அரை நிமிஷமேனும் இப்படி நமது காலத்தை முன்போல்வீணிற்கழிப்பதில்லை. சாசுவதமாகவுள்ளவஸ்து இவ்வுலகில் ஏதோ ஒன்று உண்டானல், அதைத்தேடி யலைந்தால் நித்யமான ஆனந்தம் கிடைக்குமென்பது உண்மையாயிருந்தால், இந்த நிமிஷம் முதல் அதைத்தேடி யலைந்து பிராணனைக் கொடுத்தானும் அதைப் பெற்று அழியாத ஆனந்தமனுபவிப்பேன். இல்லாவிடில் அம்முயற்சியில் இவ்வாருயிரை ஆசையற்று விட்டுத் தீர்ப்பேன். இஃதன்றி வேறொரு கருமம் பாரேன், உறக்கமும் கொள்ளேன். எனக்குள்ளதெல்லாம், 'நான்' 'எனது' என்று சொல்லும் எல்லாம் இதற்கனுகூலமாகவும் சாதகமாகவுமுள்ளமட்டுமே எனக்குரிமையுள்ளனவாம். இந்தத் தீர்மானத்துக் கிடையூறாக நிற்பது எதுவாயினும் அது எனதாகமாட்டாது. அதை விட்டொழித்து என் உண்மை விரதத்தை யெப்படியும் நிறைவேற்றுவேன்."—என்று தீரங்கொண்டு தீரா வைராக்கியமேற்கொண்டது.

அந்த ஜீவன் அவ்வழியில் துணிந்து செல்லும்பொழுது அதற்கு நேர்ந்த சாதகபாதகங்களையும், சாதகங்களை மேற்கொண்டு பாதகங்களைவென்று அச்சீவன் கானற்சலம்போல் தோன்றி மறையும் இவ்வுலகமே சதமென்று இருந்த நிலையிலிருந்து அது கனக்கண்டு விழித்தவன்போல், உலகநிலையாமையை யுணர்ந்து, "ஐயோ! நான் என் செய்வேன்! எதைத்தான் நம்புவேன்! எனதைச் சதமென்று நம்பினும் கானற்சலம்போல, என் வருத்தத்தைத் தீர்ப்பதுபோல் ஆசை காட்டிக் கடைசியில், என் தாபத்தை யதிகப்படுத்திப், 'பொய்யான என்னை மெய்யென்று நம்பின உனக்கு இதோ ஒரு சொட்டு' என்று தாயிலாக் குழந்தையைத் தலையிலடிப்பதுபோல் என் தலையிலடித்தடித்து என்னைத் தவிக்க விட்டதன்றி வேறு குணமொன்றையும் கண்டிலேனே! ஈசுவரா, தெய்வமே! நீயும் தான் இருக்கிறையோ? அல்லது நீயும் பொய்யேதானே? நான் ஏதுமறிகிலாது ஏங்கித் தவிக்கிறேனே! "ஏழைக்கிரங்கி" யென்றும் "கருணாசமுத்திரம்" "அன்னை" யென்றும் "அப்பன்" என்றும் "தோழன்" என்றும் பலவாறு மெய்யுணர்ந்த பெரியோர்கள் உன்னைப் புகழ்ந்து பாடியிருக்கிறார்களே! உலகத்தாரைப்போல் அவர்களும் உலகிலுழன்று அடிபட்ட ஜீவனை ஆற்றித் தேற்றுவதற்காகப் பொய்யும்புளுகுமாக வீண் வர்ணனைகள்செய்து ஒன்றுமில்லாச் சூன்னியத்தை எல்லாமாகச் சொல்லிப் புகழ்ந்து பேசி ஏழை மதியர்களை யேமாற்றிப் போனார்களோவென்னவோ அதுவுமறிகிலேனே! ஆ! தெய்வமே!—தெய்வமேயென்றுசொல்லியரற்றுகிறேன். தெய்வமொன்றிருப்பதே மெய்யா பொய்யாவென்று சந்தேகிக்கும் என் மனதுக்கு "தெய்வமே!" யென்று சொல்லி யரற்றுவதால் என்ன ஆறுதல் வரப்போகிறது—தெய்வமிருக்கிறதோ இல்லையோ;—அது ஒன்றோ இரண்டோ;—இது

வெல்லாம் எனக்குத் தெரியாது. நான் குழந்தையாயிருந்ததுமுதல் **ஸத்யம்** என்பது ஒன்றுண்டென்பது தெரியும். அந்த ஸத்யத்தையே நம்பி இப்பொழுது **உண்மை** யெதுவோ அதை யான் அறியவேண்டும்: "அதுவென்று லெதுவென வொன்றடுக்குஞ் சங்கை" யென்று மெய்யறிவுணர்ந்த மாதவர்களும் சொல்லியிருப்பதால் "அதையும் விட்டு" உண்மையெதுவோ, உள்ளதெதுவோ, அழியாத தெதுவோ, எதையறிந்தால் என் துக்கமெல்லாம் தீருமோ; என் மனது இச்சித்ததையெல்லாம், வெகு பாடுபட்டுத்தேடி யனுபவித்தும் எதை விரும்பிப் பின்னும் சோகமுற்று என்னைக் குரங்காட்டம் ஆட்டுவிக்கிறதோ, எதை யறிந்தால் என் தாபங்களெல்லாம் தீர்ந்து என்றும் அழியாச் சந்தோஷமும் சாந்தமும் துக்கநிவர்த்தியும் உண்டாகுமோ அதை நானறியவேண்டும். அதற்காக நான் என்னுயிரையும் கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன். உடல் பொருளாவியையும் ஒருங்கே சமர்ப்பிக்க வகையறியேனாகையால், அதை நானுகக்கொடுக்கச் சாமர்த்திய மற்றவனாகவிருக்கிறேன். எந்த மஹானாவது இந்த சமயத்தில் என்னை **அஞ்சேல்** என்றுசொல்லி அபயங்கொடுத்திரக்ஷிக்காவிடிலினி யெதிலும் நம்பிக்கையற்று "இந்த உலகம் பொய்யுலகம், இந்த உயிர் வாழ்க்கையும் பொய்வாழ்க்கை; உலகத்தார் மெச்சி மெச்சிக்கொண்டாடுவதெல்லாம் பெரும் புளுகு, எதையும் நம்பாதீர்கள்" என்று நாப்பறைபறைந்து இந்தப்பெருமோசத்தை உலகப்பிரசித்தி செய்வதே யென் தொழிலாய்க்கொள்வேன்! ஆ! கஷ்டம்! மஹாகஷ்டம்!"—என்று சோகமேலிட்டு ஸ்மரணையற்றுக் கிடந்தனன்.

அப்பொழுது, அந்தஜீவன் தன்னை மறந்து ஆழ்ந்த நித்திரையில் வீழ்ந்து, "அப்பாடா" வென்று உள்ளத்திற்களைதீர விழிக்கப்போகுந் தருணத்தில் ஏதோ ஒரு ஸ்வப்பனம் கண்டான். கண்டஸ்வப்பனம் இன்னதென்று கண்விழித்து சாக்கிரத்திலிருந்து பார்க்கையில் ஒன்றுந் தோன்றவில்லை—ஏதோ மனதில் ஒருவிதத்தேறுதலும் ஆறுதலுமுண்டாயிருப்பதுபோல் மட்டும் பட்டது. ஆனால் அது எப்படி யுண்டாயிற்றென்று விளங்கவில்லை. தான் கண்ட ஸ்வப்பனத்தில் யாரோ வந்து தன்னைத் தேற்றியாறுதல் கூறினதாக நினைத்து அதை மேன்மேலும் ஊகித்துப் பார்த்தான். ஒன்றும் விளங்கவில்லை. ஆனால் ஒரு புதுமையை மட்டும் கண்டான். உலகத்தில் எல்லாம் பொய், பொய் என்று பலுவம் பாடினதுபோக, இவன் உள்ளத்தில் "தோற்றுவதெல்லாம் பொய்யானாலும் ஏதோ இதற்கெல்லாம் பின்னால் மெய்யாக வொன்றிருக்கிறது. அதை நாமறிந்து கொள்ளமுடியா விட்டாலும் 'எல்லாம் பொய்' என்று சொன்னதுமட்டும் சரியல்ல; இந்தப் பொய்களுக்கெல்லாம் பின்னால், மறைபொருளாய் ஏதோ மெய்யொன்று இருக்கிறது: இது **சத்தியம், சத்தியம்** என்று யாரோ தன்தலையிலறைந்து சொல்லி யாணையிட்டுப் போனதுபோல், ஒரு காரணமும் சொல்லத் தெரியாமல் உள்ளத்தில் மட்டும் நம்பினான். இந்த நம்பிக்கையை, ஏதோ பொய்க்கனவென்று சொல்லித்தள்ள ஆனமட்டும் தனக்குள்ளேயே ஆய்ந்தாய்ந்து சொல்லிப் பார்த்தான். இவன் நியாயம், நிதானமெல்லாம் இவன் என்னதான் தீர்மானித்தும் நிலை நிற்காமல் மாறிப்போக, ஏதோ சத்தியம் ஒன்று மறைபொருளாயிருக்கிறது என்னும் துணிபுமட்டும் வரவர இவனை யறியாமல் இவன் உள்ளத்தில் உரம்பெற்று வளர்ந்து உறுதியாக நின்றது. இதைப் பொய்யென்று தள்ளச் செய்த

முயற்சியெல்லாம் பலிக்காது போகவே, "இந்த மெய்தான் என்னவோ! அதைக்கண்டு பிடிக்காது விடுவதில்லை" யென்று உள்ளத்துட் துணிந்து பிராணனை விடுகிறதுதான் விடுகிறோமே, இந்த வுண்மை யென்னவென்று இதைத்தேடிப் பிடித்தறிய முயற்சிப்பதில் அந்தப் பிராணனை விடுவோமேயென்று மனந்தேறி அதுமுதல் சத்தியத்தையறியத் தீர்மானித்தான். இப்படித் தீர்மானித்த ஜீவன், "நதியாழம் பாராமல் அதை நீந்தத்துணிந்தோமே: பிராணன் போவதைப்பற்றி விசாரமில்லா விட்டாலும், ஆற்றைக் கடக்கத் துணிந்தபின் ஆழந்தெரியாது ஆற்றிலிறங்கிப் பிராணனை விடுவதுதானு பெரியகாரியம்! சை! என்ன அற்பப்புத்திபார் நம் புத்தி!" யென்று தன்னையே வெறுத்து "ஆற்றின் ஆழம் அறிய நமக்கு வகை தெரியாவிட்டாலும், மூரட்டுத்துணிச்சலாகத் துணிந்து வீணே பிராணனை விடாமல், அதற்கு வேண்டிய உபாயந்தேடி, நம்மாலான சாமர்த்தியத்தையெல்லாம் உபயோகித்து ஆற்றைக்கடப்பதே ஐயம் என்று துணிந்து, அதற்காக ஒரு தெப்பம் இருந்தால் அதன் துணையைக்கொண்டு தன்னாலான முயற்சியும் செய்து ஏதோ ஒருகை பார்த்து விடலாமென்று தீர்மானித்தான். அப்படியே தெப்பமும் ஒன்று அவனுக்கு 'தற்செயலாகவோ' 'தெய்வச் செயலாகவோ' அகப்பட்டது. இப்படிக்கிடைத்த தெப்பத்தைக்கொண்டு அந்த ஜீவன் ஆற்றைக்கடந்து அக்கரை சேரச்செய்த முயற்சியையும் அம்முயற்சியின் வரலாற்றையும் முடிவையும் பற்றிச்சொல்லும் **"நவபவபவ ரஸாமிர்த ஸாகரமாம்"** நம்முன்னிருக்கும் **"ஆத்மவித்யாமஞ்சரி"** யென்னும் இந்நூற்றிரட்டு. அவ்வாற்றைக்கடந்து கரையேறிப் பிழைத்தது புனர்ஜனனமாக முடிந்ததால், அந்த நூதனப்பிறப்பின் மகிமைப் பிரபாவமாகிய "ரஸாமிர்தத்தை" அது அளவற்று விளங்குவதுபற்றி "ஸாகரம்" என்று சமுத்திரத்துக்குவமையாகச் சொல்லி வர்ணிக்கலாயிற்று. அச்சீவன் துணிந்து கடந்த ஆற்றைச் "சமுசார ஸாகரம்" என்பார்கள். ஏனெனில் மேலோர் "ஸம்ஸாரம் ஸாகரம் துக்கம்" என்று சொல்லியிருப்பதனால் எனக்கொள்க. அதைக் கடப்பதற்கு உதவியாயிருந்த "தெப்பத்தை" 'குருமூர்த்தம்' என்றும் 'சத்குரு' வென்றும் சொல்வார்கள் மேலோர்.

இப்படியே ஒவ்வொரு சீவனும் நன்மைக்கடைப்பிடித்து தர்மவழியிற் செல்லும் பொழுது ஒரு ஆபத்காலத்தில் எந்த வழிபற்றிச் சென்றாலும் தர்ம சங்கடம் நேருவதைக்கண்டு உள்ளந்தடுமாறி உளம் நெக்கு விட்டுருக மெய்சோர்ந்து நாவரண்டு நலந்தீதின்ன தென்றறிய மாட்டாமல் தர்ம சங்கட மேலிட்டு, உயிரையும் உலக வாழ்க்கையையும் வெறுத்து "அப்பா! போதும், போதும்! இந்தப் பொய்யுலகிலிருந்து புண்பட் தேடினது! இதை விட்டொழித்துத் தீர்ப்பதே நலம். தன்னந்தனியனாய்த்திரிந்து வருந்தினாலும் வருந்துவேன். இந்தப் பொய் வாழ்வு வேண்டேன், விரும்பேன்" என்று விரக்தி மேலிட்டு வைராக்கிய வசனாய், உடல்பொருளாவியையு மொருங்கே வெறுத்து பற்றெலாம் விட்டும் பற்றுக்கோடு வேண்டிக் கொழுக் கொம்பில்லாக் கொடிபோல் மனந்தடுமாறித் தத்தளிக்கும் காலம்வரும். அப்பொழுது ஸர்வதயாபரக்கடவுள் துன்புற்றவர் துக்கந்துடைக்கச் சமயம் எங்கே யெங்கேயென்று எதிர்பார்த்திருந்து நல்ல சமயத்தில் நறுக்கென்று குதித்து வந்தவர்போல் 'குருமூர்த்த'மாக வந்து ஆதரவுகூறி உண்மையுபதேசஞ்செய்து ஆத்மரக்ஷணை யளித்துக் காப்பாற்றுவார். இது ஒரு மாமுவிதி.

அர்ச்சுனன் இப்படி துன்புற்றுத் தவித்து மூர்ச்சித்து விழுந்த காலத்தையே ஸ்ரீ கிருஷ்ணபகவான் பரமசாதகமாகக் கொண்டு அவனுக்கு உண்மையுபதேசஞ் செய்வான் 'ஸாங்கிய யோகம்' முதலாக ஸத்யத்தை யெல்லாவிதத்தாலும் 15-வித 'யோக'ங்களில் பரமார்த்தமாக வுபதேசஞ் செய்தார். அர்ச்சுனன் சகிக்க முடியாத துக்கமேலிட்டுத் துன்பசாகரத்தில் மூழ்கியதையே 'அர்ச்சுன விஷாதயோகம்' என்று பகவத் கீதையின் முதலதிகாரம் விவரிக்கின்றது. இரண்டாவது அதிகாரத்தில் 'ஸாங்கியயோகத்தை' யெடுத்து ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ச்சுனனுக்கு உபதேசிக்கிறார்.

---

## MUMUKSHUTARAKA, OR, 'THE WAY TO SALVATION' BY THE DISCIPLES OF SANKARA.

ஸ்ரீமத் சங்கராசாரிய ஸ்வாமிகளின் சிஷ்யர்கள்

உபதேசித்தருளிய

# முமுக்ஷுதாரகம் அல்லது, "பஜகோவிந்தம்"

என்னும்

## ஸ்ரீ கோவிந்தமஞ்சரிகா ஸ்தோத்திரம்.

---

### குருவணக்கம்.

நேரிசை வெண்பா.

1. பத்திக்குச்சான்றுயப் பரஞானப்பேரொளியாய்
முத்திக்குவித்தாய் முளைத்தவொரு—சித்தன்
திருவடியேயன்றி வணங்காதென் சென்னி
உருவமலாதுள்ளா தென்னுள்.

2. வேதாந்தமென்னுங் கடலைவியன் மதியால்
தீதீர்ந்திடக்கடைந்த தெள்ளமுதாம்—போதத்
திருநூறனையளித்த தேசிகர்க்குக்கைம்மா
றொருநூறினுமிலையே யுற்று.

சென்ற சஞ்சிகையில் ஆசார்ய ஸ்வாமிகள் ஞானசூனியனுகிய ஓர் வையாகரணிக்கும் அவன் மூலமாக உலகத்தாரெல்லாருக்கும் அஞ்ஞானவிருள் நீங்கி, ஞானப்பிரகாச முண்டாகும்படி உபதேசித்தருளிய பரமார்த்தத்தை விவரித்துக் கூறினோம். இங்கு, அவரது கட்டளையாலே அவருடைய சிஷ்யவர்க்கங்களில் முதன்மைபெற்ற பத்மபாதர்முதலான பதினல்வரும் அப்பண்டிதனுக்கு ஆசிரியர் உபதேசத்தைத் தொடர்ந்து உபதேசித்தருளிய பரமார்த்தத்தையும் எடுத்துக் கூறுவோம். 'ஆசானெவ்வழி மாணுக்கரும், அவ்வழி' என்னும் நியாயப்படி இவர்களுடைய உபதேசமும் சங்கரர் உபதேசத்தை அநுசரித்திருக்குமென்பது கூறாமலே அமையும். அவ்வுபதேசம் பின்வருமாறு:—

### பத்மபாதர்.

1. பொருண்மீதுறு சிந்தைபொருவந்துதென்
தெருண்மாறுரை செப்புநர்தாமிலரோ
அருண்மேலவர் நட்பெனுமம்பியலால்
இருண்மாபிறவிக் கடலேறரிதே.

(இ-ள்.) பொருள் சம்பாதிக்கவேண்டும் என்னும் இச்சையினால் உன் கருத்தைப் பொருள் மேலேயே எப்போதும் செலுத்துவதென்னே? பொருளால் கவலையேயன்றிச் சுகமுள்ளதோ? ஆதலால் அப் பொருளாசையை யொழிக்குமாறு நல்லுபதேசம் செய்து உன்னைச் சிட்சிப்பவரில்லையோ? சத்புருஷர்களுடைய சகவாசமொன்றே இவ்விருள் நிறைந்த சம்சார சாகரத்தைக் கடத்தற்குரிய மரக்கலமாகும், என்றபடி.

கருத்து—சத்புருஷ சகவாசத்தாலன்றி முத்தியடைதல் கூடாது.

### தந்த்ரோடகர்.

2. சடைபூணுகி லென்தலை முண்டிதனுய்
விடிலென்னுடைகாவிகொள் வேடமுளான்
மடநெஞ்சொடு காணுநிர்வாய்கிலரால்
வடிவங்கள் வயிற்றினிமித்தமரோ.

(இ-ள்.) காவிவஸ்திரம் தரித்துக் தவவேடம்பூண்டுள்ள சந்நியாசி சடைமுடி தரித்தால்தானென்ன, அல்லது தலையை முண்டனம் செய்து கொண்டால் தானென்ன? எவனொருவன் குருவினால் உபதேசிக்கப்பட்ட மார்க்கத்தில் சிரத்தை யில்லாமல் சந்தேகமடைகின்றானோ அவன் ஒருநாளும் பிரமஸ்வரூபத்தைப் பெறமாட்டான். ஆதலால், மேலே சொல்லிய தவவேடங்கள் எல்லாம் அப்படிப்பட்டவனுக்கு வயிற்றுவளர்ப்புக்குப் பயன்படவன்றி வேறேபயன் படமாட்டா, என்றபடி.

கருத்து—குருபதேச மார்க்கத்தில் நிற்றலே முத்தியைப் பெறுவிக்கும் சாதனமாகும்.

### ஹஸ்தாமலகர்.

3. மெலியாவுட லம்விளராமுடிபல்
பலவும்வழுவா பதியாவொருகோல்
வலிபோய்முதுமை மருவும்பொழுதும்
தொலையாதுடலைத் தொடருந்நசையே.

(இ-ள்.) சரீரம் மெலிந்து பலவீனப்பட்டுத், தலைமயிர் முழுதும் பூசினிக்காய்போல் நரைத்து வாயிற் பற்களெல்லாம் ஒன்றில்லாமல் விழுந்துபோய்க், கையில் தடிபிடித்துத் தள்ளாடித் தத்தளித்து நடந்து, உடல் திரைத்துத் தளர்ந்து, மூப்பு மேலிட்டுக், காடு வாவென்றழைக்க வீடு போவென்றுதள்ள வருந்தும் காலத்தும், புத்திர வித்தகளத்திரங்களில்வைத்த ஆசையானது உடலைவிட்டு நீங்கமாட்டாது,என்றபடி.

கருத்து—ஆசா பரித்தியாகமே மோக்ஷத்தைப் பெறுதற்கு முக்கிய சாதனமாகும்.

### சுபோதர்.

4. எரிமுன்னிடம் வெங்கதிர்பின்னிடமா
இருசாநுவிரா சுபுகத்தியையத்
தருவாய்க்கரப்பிட்சைகொளாவுறினும்
ஒருவாதொருவாதுறுகாதலரோ.

(இ-ள்.) எரிகிற நெருப்பு முன்பக்கத்திலும், சூரியன் பின் பக்கத்திலுமாகப் பகற் பொழுதிருந்து, இரவில் இரண்டு முழங்கால்களும் மோவாய்க்கட்டையிற் பொருந்தக் குளிரில் விடவிடவென்று நடுங்கி யொடுங்கி வருந்தி, மாத்தடியிற் படுத்துக் கையிற் பிச்சை வாங்கியுண்டு காலம் கழிக்கும் சர்வசங்க பரித்தியாகியையும் கூட ஆசாபாசமானது முற்றிலும் விட்டு நீங்காது, என்றபடி.

கருத்து—எப்படிப்பட்டவர்களுக்கும் ஆசை நீங்குவதில்லை. இவ்வாசை நீங்குமாயின் முத்தி கையிற் கிடைத்தது.

## வார்த்திகக்காரர்.

5. திரையார்கடல் கங்கைசெலாவிரதம்
மவநாபலதானம்வழங்குகினும்
பரஞானமிலாதவர் நீள்பிறவி
ஒருநூறினும் விடுறுதற்கரிதே.

(இ-ள்.) சேது யாத்திரை கங்காயாத்திரை முதலான தீர்த்தயாத்திரை செய்தபோதிலும், நித்திய நைமித்திகங்களான விரதங்களை விதிப்படி அநுஷ்டித்து வந்தபோதிலும், பாவங்களைப் போக்கி சுவர்க்கத்தைக் கொடுக்கவல்ல அநேகதானங்களைச் செய்தபோதிலும், ஒருவர்க்குப் பரமார்த்த பரிஜ்ஞான மில்லையாயின், நூறு ஜன்மங்களில் கூட முத்தியை அடைதற்கொண்ணாது, என்றபடி.

கருத்து—ஞானமே முத்திக்குச் சாதனமாகும்.

## நித்யானந்தர்.

6. வானோர்தருவின் னடியேமனையா
பூநீளணையாப்புனை தோலுடையா
நானாநலமுந் தவிருந் துறவால்
ஏனோவொழியா மகிழ்வெய்தலதே.

(இ-ள்.) சுவர்க்கம் போன்ற ரமணீயமான மரத்தினடியே தனக்கு வாசஸ்தானமாகவும், பூமியே படுக்கையாகவும், மான்றோலே உடையாகவும் பெற்று, மாலை சாந்தம் மகளிர் முதலானவைகளால் உண்டாகும் பலவிதமான விஷய சௌக்கியங்களை மனோவாக் காயங்களால் நீக்கி அடையும் விரக்தியினால், ஒருவனுக்கு நிரந்தரானந்தம் ஏன் உண்டாகமாட்டாது? என்றபடி.

கருத்து—சர்வவிஷயேச்சாபரித்யாகமே நித்யானந்த ரூபமான மோக்ஷ சாதனமாகும்.

## ஆனந்தகிரி.

7. ஒகேயுறினும் முலகின்புறினும்
ஏகாதனியே யினமேயுறினும்
வாகாவெவனுள் வதியும்பரமேல்
ஆகாவவனே மகிழ்வார்பவனே.

(இ-ள்.) மந்திரயோகம் முதலான யோகமார்க்கங்களில் நின்றாலும் சரி; மாலை சாந்தம் வனிதை முதலான போகானுபவங்களில் இச்சை கொள்ளினும் சரி; புத்திரமித்திராதி ஜனங்களின் மத்தியிலிருந்தாலும் சரி; அவர்கள் அனைவரையும் ஒழித்துச்சென்று தனியே வாசம் பண்ணினாலும் சரி; எவனுடைய மனம் அவஸ்தாத்ரய சாட்சியாயிருக்கும் சர்வ பரிபூரண வஸ்துவினிடத்தில் ஐக்கியமாய் ஆனந்தமடைகின்றதோ அவனே எப்போதும் இடைவிடாத ஆனந்தத்தை அடைபவனாவான், என்றபடி.

கருத்து—மனோலயமே மோட்சம்; மனோவிகாரமே பிரபஞ்சம்.

## த்ருடபக்தர்.

8. கீதைப்பொருள் கிஞ்சிலெனுந்தெரியா
ஏதத்தகல்கங்கையி னெட்பருகா
ஓதித்திருமா லொருகாலுணர்வாற்
சோதிக்கலனே யமனுந் துணிவே.

(இ-ள்.) எவனொருவன் ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தி அர்ச்சுனனுக் குபதேசித்தருளிய பாமார்த்தப் பிரதி பாதகமான கிரந்தத்தைக் கொஞ்சமாவது சத்குருபதேச மூலமாகத் தெரிந்துகொள்கின்றானோ, எவனொருவன் கங்காதீர்த்தத்தில் எள்ளளவாவது அதன் மகிமையையறிந்து அந்த்யகாலத்தில் பானம் செய்கின்றானோ, எவனொருவன் ஸ்ரீமந்நாராயண மூர்த்தியின் ஆராதனம் எப்போதாயினும் ஒருகாலத்தில் அசஞ்சல பக்தியோடு யதாவிதிப்படிச் செய்கின்றானோ அவனது பாபபுண்யங்களைப்பற்றி யமதர்மராசன்கூட ஆராய மாட்டான் நிச்சயம், என்றபடி.

கருத்து—வேதாந்தவிசாரமும், மகாநதிஸ்நானமும், அசஞ்சலபக்தியோடு செய்யும் பகவத்ராதனமும் மோக்ஷாவாப்திக்குச் சாதனங்களாம்.

## நித்யநாதர்.

9. பிறவாவிறவா பினுமோரனைசூல்
உறலாய்வரலா புலகிங்குழன்மால்
நெறியாலெனையானிறை பேரருளால்
கறைவான்முரனைத் தெறுகாவலனே.

(இ-ள்.) பலவிதமான துன்பங்களுக்கிடனாய் கடைத்தேறுதற் கரிதாய்க் குலால சக்கிரம்போல ஜனனமரணாதிகளினால் இடைவிடாமல் சுழல்வதாகிய இந்த சம்சாரத்தில் உயிர்கள் கர்மானு சாரமாகப் பிறப்பதும் இறப்பதும் மறுபடியும் ஓர் தாய்வயிற்றில் கிடந்து பிறப்பதும் இவ்வாறாக உழல்வனவாகும். ஆதலால், முராசனனாகிய ஸ்ரீமந்நாராயண மூர்த்தி! அடியார்களிடத்தில் வைத்தகருணையினாலே என்னை நீ காத்தருள்வாயாக, என்றபடி.

கருத்து—சம்சார நிவிர்த்திக்கும் மோக்ஷாவாப்திக்கும் பக்திமார்க்கமே உத்தமமானது.

## யோகாநந்தர்.

10. வழியிற்கழிகந்தல் வனைந்தவனாய்
பழிகற்செயல்சார் வழிபற்றலனாய்
மழவைச்சிறுபித்தரை யொத்தவனாய்
விழுமப்பொருண் மேயவன்யோகினனே.

(இ-ள்.) வழியிற் கழித் தெறிந்துகிடக்கும் கந்தையையே வஸ்திரமாகத் தரித்து, புண்ணியபாபத்தினின்று (அதாவது விதி நிஷேதத்தினின்று) விடுபட்ட மார்க்கத்தில் நின்று, ஐந்துவயதுக்குட்பட்ட குழந்தையையும் பித்தனையும் ஒத்துப், பிரமஸ்வரூபானு சந்தானத்தில் பதிந்த மனமுள்ளவனாய் ஆனந்தத்தையடைபவனே யோக நிஷ்டனாவான், என்றபடி.

கருத்து—விதிநிஷேதங்களில்லாமல் பித்தனைப்போலத்திரிந்து சர்வசங்கீரகிதனாய் பிரமானுசந்தானம் செய்கின்றவனே யோகநிஷ்டன்.

### சுரேந்திரர்.

11. எவனீயவென்யா னெவனின்றுறுவேம்
எவளன்னையெனக் கெவர்தாதையெனு
இவையுள்ளுணரா வுறவிங்கெறியின்
புவனம்புகலோர் கனவாகுமரோ.

(இ-ள்.) என்னிலும் வேறாகிய நீ எவன்; உன்னிலும் வேறாகிய நான் யாவன்; எங்கு நின்று நாம் வந்தோம்; என் தாய் எவள்; என் தகப்பன் யாவன்; என்று இவ்வாறு மூலவிசாரம் செய்து ஆராய்ந்து தெளிந்து அவ்வாறு தெளியப்பட்ட தனது சுற்றங்கள் எல்லாவற்றையும் துறந்து ஒருவன் இருப்பானாயின் கனவிற்கண்டபொருள் போலவே இவ்வுலகமெல்லாம் மித்தையாவது என்னும் மெய்யுணர்வுண்டாகும், என்றபடி.

கருத்து—மூலத்தை ஆராயின் தாய் முதலான எல்லாரும் மித்தியாபூதர் ஆவார்கள்.

### மேதாதி.

12. என்பாலினுநின்னினு மெங்கணுமால்
அன்பாவுளனாக விழுக்குறுலென்
இன்பானிறைவா யெனினெங்கணுநீ
வன்பாலறவோர் நிலையாமதியே.

(இ-ள்.) எதிரிலிருக்கும் உன்னிடத்திலும், உன்னை நோக்கிச்சொல்லும் என்னிடத்திலும் எல்லாவிடங்களிலும் சர்வவியாபகனான பரமாத்மா ஒருவனே தங்கியிருக்க, உன்னிலும் என்னை வேறாக எண்ணுதலாலே என்விஷயமாய் வீணாக அசூயாதி துர்க்குணங்களாலே பொறாமை யடைகின்றாய். விரைவில் சர்வவியாபகனான பரமாத்ம ஸ்வரூபத்தைப்பெற்று முத்தியடையவிரும்புவாயானால் சமஸ்த ஜீவகோடிகளிலும் சமானபுத்தி யுடையவனாவாயாக, என்றபடி.

சகருத்து—சர்வபூதங்களிலும் சமபுத்தி வைத்துப் பிரமவிசாரம் செய்தலே மோக்ஷ சாதனமாகும்

### பாரதிவம்சர்.

13. துறவாவுறுகாம முதற்றுகள்சேர்
இறவாவிருள்தீர் பரமேயுணர்வாய்
உறவார்பர ஞானமுறாதவரைத்
தெறுவார்நரகே யமசேவகரே.

(இ-ள்.) காமக்ரோத லோபமோகங்களை விட்டொழித்து பெருமைபெற்ற அஞ்ஞானரகிதனான பரமாத்மாவை அறிவாயாக. ஆத்மபரிஜ்ஞான மில்லாத மூடஜனங்களை நரகில் வீழ்த்தி தூதர்கள் உபத்திரவிப்பார்கள், என்றபடி.

கருத்து—கயிற்றில் தோன்றும் அரவமயக்கம் போல பரமாத்மாவிடத்தில் தோன்றும் ஜீவமயக்கம் நீராத பக்ஷத்தில் மோக்ஷம் உண்டாகமாட்டாது. அப்படிப்பட்ட மோட்சசாதனமான ஆத்மானாத்ம விவேகமில்லாதவர்களுக்கு ஜன்ம பரம்பரை நீங்காமையினாலே நிரந்தரம் நரகப்பிராப்தியே உண்டாகும்.

### சுமதி.

14. நற்கீதையுமாயிர நாமமுமோ
திக்கார்வணன் மேனிநினைத்திடுவீர்

எக்காலமுநல்லவ ரோடியைவீர்
புக்கார்வறிஞர்க் கருள்வீர்பொருளே.

(இ-ள்.) பகவத்கீதையும் பரமேச்வரன் பார்வதீ தேவிக் குபதேசித்தருளிய ஸ்ரீவிஷ்ணு சகஸ்ர நாமத்தையும் சத்குரு மூலமாய் நன்றாகப் பொருளுணர்ந்து பாராயணம்செய்து, இலக்ஷ்மீபதியான ஸ்ரீமந் நாராயண மூர்த்தியின் திவ்யஸ்வரூபத்தை ஆசார்யோபதேசானு சாரமாக இருதயத்தில் தியானம் செய்வீர்கள். சத்புருஷ சகவாசமே எப்போதும் செய்வீர்கள். ஏழைகளுக்கு திரவியத்தைக் கொடுப்பீர்கள், என்றபடி.

கருத்து—வேதாந்தார்த்த விசாரமும், ஆத்மஸ்வரூபானு சந்தானமும் சர்வபூதங்களிடத்தும் சமபுத்தியுடைமையும் மோக்ஷசாதனமாகும்.

"பஜகோவிந்தம் பஜகோவிந்தம்
பஜகோவிந்தம் மூடமதே."
கோவிந்தனையே குறியாய் குறியாய்
கோவிந்தனையே குறியாய் குறியாய்.

* * *

பத்மபாதர் முதலான பதினால்வர் உபதேசித்தருளிய
சதுர்தச மஞ்சரி முற்றும்.

எஸ். முத்து ஐயர், பி. ஏ.

---

* "The Varieties Of Relegious Exprience."
"A Study in Human Nature."

## "சிவனருள் பல பல சீவனுமாகும்."

"அன்கரூர் வழிமுதலாதிப் பிரானும்
இவன்றானென நின்றெளியனு மல்லன்
சிவனருள் பலபல சீவனுமாகும்
நயன்றான் வரும்வழி நாமறியோமே"—திருமந்திரம்.

திருமூலதேவர் இப்பாட்டில் வெகு அழகாயும் சுருக்கமாயும் சொல்லியிருக்கிறபடி ஆதிமுதலாகிய கடவுள், "அகன்றார்",—அதாவது 'தன்னைக்கொடுத்துத் தான் இந்த அநித்தியமான தேகமனோதத்துவங்கள் அல்லவென்று உறுதிமேற்கொண்டு, "தேகம் நான், மனது நான், புத்தி நான், கண்ணுக்குப்புலப்படாத பிராகிருத சக்தி ஸ்வரூபமாயிருக்கிற அவ்யக்தம் நான்" என்று மயக்கத்தால் அவைகளுக்கியல்பாயுண்டாம் சுகதுக்க உபாதிகளைத் தன்னதாகப்

* Being the Gifford Lectures on Natural Religion delivered at Eidniburgh in 1901-1902, by Professor William James LL. D, &ce. of the Harvard University, 1903, Longmans, Green & Co.

பாவிக்கும் பாவனையை விட்டகன்றார்' வழியிலே முதலாகவுள்ளவன்—ஆதிப்பிரானும் கடவுள். அவனை இவன்தானென்று குறிப்பிட்டுச்சொல்லி நிர்மாணித்துக் கூறுவதும் சாத்தியமில்லை. நன்மையே ஸ்வரூபமெடுத்ததென்ன நித்தியமங்களாவதாரமாக விருக்கும் அவன் (சிவன் என்றால் இதுவன்றி வேறொன்றுமில்லை) அருட்பிரவாகம் சிவகோடிகளில் பலபல வாகத்தோற்றும். "நயன்றான்" (நயன்=இன்பம், நன்மை, பயன்)—நித்யமங்கள ஸ்வரூபனும், இன்ப வடிவாகவும், உயிர்வாழ்க்கைக் குறுபயனுமிருக்கும் அவன் "வரும்வழி நாம் அறியோமே" என்றார். இது ஸ்வானுபவதிடன் பற்றி உண்மையில் ஓதின நுண்ணிய பொருள்மிகு இன்னருள் வாக்காம். (Rationalism) புலனறிவாய்க் கண்டதே காட்சியென்றும் மற்றதெல்லாம் மனிதனுக்கெட்டாத இரகசியங்களென்றும் நம்பியிருக்கும் மேற்றிசையில் அனேகர் புலன் பொறியனுபவங்களால் எட்டக்கூடியமட்டும் ஆராய்ந்து சென்றும் முடிவுகாணாது மனத் திருப்தியுமடையாது மேன்மேலும் உண்மையை உள்ளபடி கண்டுபிடிக்க ஊக்கமேற்கொண்டுழைத்து வருகிறார்கள். இவர்களில் தலைமை வாய்ந்த சிரேஷ்டர்கள் சிறுகச்சிறுக ஆத்ம தத்துவங்களை அரைகுறையாகக்கண்டு அவற்றை முற்றுமறிய முயற்சித்து வருகிறார்கள். இவர்கள் "பகிர்முகப்பார்வை"யிலேயே ஆதிதொட்டுப் பழகினவர்களாதலாலே, அந்தவழியில் சென்று அதற்கியல்பாயுள்ள தத்துவசாஸ்திர முறைப்படி நிச்சயமாயறியக்கூடியதையே உண்மையென்று அங்கீகரித்து மற்றவற்றை 'அறியக்கூடாதவை' யென்னும் வகுப்பில் சேர்த்து ஒவ்வொரு சாஸ்திரவிற்பன்னரும் தான் சென்றளவே மனிதன் தன்னறிவால் அறியக்கூடிய அறிவின் எல்லை'யென்றும் அதற்கப்பால் மனிதன் அறிவுக்கெட்டாத இராஜ்யமிருக்கிறது, அதைப்பற்றி யொன்றும் தெரியாதென்றும் சொல்லிவந்தார்கள். அதைக்கேட்டு அவ்வக்காலத்துக் குட்டிவித்வான்களும் சாஸ்திரக்ஞர்களும் 'சரிசரி' யென்று கூத்தாடினார்கள். அவர்கள் கூத்தாடினதைப் பார்த்து இந்தியாவில் இங்கிலீஷ்படிப்புப் படித்துப் பட்டம் பெற்ற மேதாவிகளும் உண்மையுணரமாட்டாத கிறிஸ்தவபாதிரிகள் வார்த்தைகளைக் கேட்டு அறிந்தும் அறியாமலும் ஆத்மவித்தையையிழந்து, பூத, பௌதிகசாஸ்திரங்களையும், தேகமனோ தத்துவ சில்லரை புண்மைகளையும் பெரிதாகப்பாராட்டி ஆர்ய மதத்தை அவமதித்து உண்மையறியமாட்டாமல் உதாசினமாகப்பிதற்றி வந்தார்கள். அப்படிக் குதித்த 'மூர்க்கரொடு' இதை எழுதுபவரும் ஒரு காலத்துச் சேர்ந்து கூத்தாடியவரேயென்பது சொல்லாமே யமையும். ஆனல் உண்மையில் நாட்டம் வைத்துழைத்தால் உளக்கண் திறவாமற் போவதில்லையாதலால் அந்தக்காலம் போய் உண்மையை உணரும்படியான உளக்கண் திறக்கப்பெற்ற பாக்கியத்துக்காகப் பரமதயாளுவாம் பராபரக்கடவுளைத் திரிகரணசுத்தியாய் வணங்கிச் சதாகாலமும் துதி செய்து வருகிறார். கிழக்கு வெளுத்துக் காணும் வெளிச்சம் உச்சிகால சூரியன்போல் விளங்குங்காலம் எப்போ, எப்போ வென்று ஏங்கிநின்றாலும், உண்மையையுணர்ந்தபடியோதத் தடையில்லையால் ஆத்மார்த்தமாக யார் எவ்வகையிற் சொல்லினும் அதையுள்ளபடியுணர்ந்து கொண்டாடுவதில் அவருக்குள்ள பெருமகிழ்ச்சியை வெளியிடாதிருக்க சாத்தியமில்லை.

தலைப்பில் இங்கிலிஷில் குறிக்கப்பட்ட பெயருள்ள புஸ்தகம் அமெரிக்காவிலுள்ள பேர்போன ஹார்வார்ட் யூனிவர்ஸிடியில், தத்துவபோதகாசிரியராயிருக்கும், மனோதத்துவாராய்ச்சியில் சிரேஷ்டரெனப் பேர்பெற்றப் ப்ரொபெஸ்ஸர் உவில்லியம் ஜேம்ஸ் அவர்களால்

எடின்பரோ நகரில் அவ்விடத்து யூனிவர்ஸிடியார் ஆதீனத்தில் "Natural Religion" பிராகிருத மத சம்பந்தமாக, லார்ட் கிப்போர்ட் என்பவர், அவ்வக்காலத்துப் பிரதமஸ்தராக விளங்கும் தத்துவராய்ச்சி வல்லோர், அவர்கள் கருத்தை வெளியிட்டுப் பிரசங்கம் செய்யவேண்டுமென்று, பொருநிதி வைத்துப் பரோபகாரமாகச் செய்துள்ள ஒருபண்டைய ஏற்பாட்டின்படி சென்றவருஷத்தில் செய்த பிரசங்கங்களின் திரட்டாம். இதில் 20 பிரசங்கங்களின் விஷயம் சேர்ந்திருக்கிறது. இவர் பிரசங்கிக்க எடுத்துக்கொண்ட விஷயம், 'பிராகிருத ரீதியாகப் பார்க்கில், ஆத்மானுபவமென்று மதப்பற்றுள்ளோர் சொல்லும் பலபல அநுபவங்கள் எம்மதத்தினுலும் கட்டுப்படாத உண்மையொன்றுக்கே கட்டுப்பட்டுநிற்கும் தத்துவாராய்ச்சி விற்பன்னர் கண்ணுக்கு என்னமாகத் தோற்றுகின்றன' வென்று ஆராய்ந்து அவர் அபிப்பிராயத்தை யாவருமறியத் தெளியக் கூறுவதாகவிருந்தது. இவர் செய்து கொண்ட இந்த சங்கல்பத்துக் கிசைய, தான் மேற்போட்டுக் கொண்ட கடமையை வெகு நன்ருகவும், சாமர்த்தியமாகவும், அதிநுட்ப புத்தியோடும், ஆத்மவுணர்ச்சியோடும் இவர் செய்துமுடித்து, அப்பிரசங்கங்களிற் செப்பியவை உலகிலுள்ளார் யாவருக்கும் பயன்படப் புஸ்தகரூபமாகவும் பிரசுரித்துளார். இப்புஸ்தகம் 20-வது நூற்ருண்டின் துவக்கமாம் இக்காலத்தில் அதிமேலான அற்புத புஸ்தகமாகக் கொண்டாடப் படத்தக்கது. ஏனெனில், இவர் தம்முடைய நுண்ணறிவாலும், ஆத்மவுணர்ச்சியாலும், நடுநிலைதவருது நிற்கும் நிதானபுத்தி விசேஷத்தாலும், சொல்வன்மை புத்திவன்மையாலும், சமயோசித சாமர்த்திய விசேஷத்தாலும், தற்காலத்தில் புராதனமாயுள்ள உண்மையான மதக் கோட்பாடுகளுக்கும் நூதனமாய்க் கிளம்பியுள்ள நவீனசாஸ்திரக் கொள்கைகளுக்கும் திராவியாஜமாயிருந்த தொல்லையைத் தீர்க்க உண்மையில் வழிகாட்டி, மதசித்தாந்தமும், சாஸ்திர சித்தாந்தமும் ஒன்ருெடொன்ருெவ்வாது முரண்படவே யுதித்தனவென்று கொண்டுள்ள தப்பபிப்பிராயத்தைப் போக்கி; உண்மையாக உள்ளபடி, அநுபவரீதியாகப் பார்க்கில், உண்மை எல்லாவிதத்திலும் ஒன்றே; நவீன சாஸ்திரமுறை பற்றிச் செல்வோர், ஒருவிதமாக அவர்கள் அநுபவத்தையுரைக்க, புராதனமாயுள்ள மதவழிபற்றிச் சென்ருேர் வேருெரு விதமாக அதேயனுபவத்தை வெளியிடுகிருர்கள்; அநுபவரீதியாக ஆராயின், உண்மையெல்லாவற்றிலும் ஒன்றே: ஆனல் ஆராய்ச்சிமுறை பற்றியும், ஆராய்ந் தறிந்தோர் தேகமனேபாவ ஸ்வபாவம் பற்றியும், ஒரே உண்மை, அநுபவத்தில் பல பல விதமாகப் பிரபலப்பட்டு விளங்குகிறது; இவற்றில் அவரவர் தேகமனேபாவ ஸ்வபாவங்களுக்குரிய குணக்குப் பிணக்குகளை நீக்கிப்பார்க்கில் ஆத்மானுபவம் அதிசயமான விதமாக அதன் உண்மையான தத்துவத்தையனுசரித்து விளங்குகிறது என்று நன்ருகக் காட்டியிருக்கிருர்.

527-பக்கங்களடங்கிய 20-பிரசங்கங்களில், 19-பிரசங்கங்கள் (484-பக்கங்கள்) மதக் கொள்கை பற்றியும் பற்ருமலும் ஆத்மானுபவம் என்று சொல்லத்தக்க உண்மையான மேலோர் ஸ்வானுபவங்களை யெடுத்துச்சொல்லி, மனேதத்துவாராய்ச்சி முறைப்படி அவைகளின் ஒற்றுமை வேறுபாடுகளை விளக்கிக் காட்டி, 20-வது பிரசங்கத்தில் தம்முடைய முடிவான அபிப்பிராயத்தைக் கூறுகிருர். மதப்பற்றுள்ளோர் அநுபவங்களை மனேதத்துவாராய்ச்சி முறைபற்றியும், சாஸ்திர உண்மைபற்றியும் அநுபவரீதியாக ஆராய்ந்து பார்த்துப் பிரசங்கித்து

வந்ததின் முடிவாக அவர் பின்வரும் உண்மைகள் நம்பத்தக்கனவாக விருக்கின்றனவென்று கூறுகிறார். அவை:—

"1. புலனறிவுக்குப் படும் இகலோகம், ஆத்மார்த்தமாயுள்ள ('ஆத்மலோகம்'என்கிறார்) பரலோகத்தின் ஒரு பாகம்; அதுவின்றி இதுவில்லை. (இதையே **இகம் பரம்** என்பார் நம்மனோர்.)

"2. பரலோகத் தோடொக்க இகலோகம் பொருந்தவாழ்வதே நாம் ஜன்மமெடுத்ததற்குப் பலனும் முடிவுமாம்.

"3. பரலோகாதிபதியாம் ஆத்மாவோடு (இதை கடவுள் என்றாலும் சரி, விதி யென்றாலும் சரி) உள்ளமொன்றுபடக்கூடியிருப்பதாகிய 'பிரார்த்தனை' யென்பது உள்ளுத்து நிகழும் ஒருவிதப் போக்கு. இந்தப் போக்கில் போவதினால் உண்மையாகவே காரியம் நடக்கிறது; ஆத்மசக்தி பாய்வதனால் கண்கூடாக் காணக்கூடிய பயன்கள் உண்டாகின்றன. இவை மனோதத்துவங்களால் மனதையும், பௌதிகதத்துவங்களால் பூதலோகத்தையும் பாதிப்பனவாயிருக்கின்றன. 'Religion' சமயம், மதம், மார்க்கம், பக்தி யென்று பலபெயர்களால் வழங்கும் பதத்துக்குரிய பொருளில் மனோதத்துவ சம்பந்தமான பின்வரும் குணவிசேஷம் சேர்ந்திருக்கிறது.

"4. உயிர் வாழ்க்கையில் நூதனமாக ஒரு ருசி அல்லது சுவையுண்டாகிறது; இது உயிருக்குக் கிடைத்த ஒரு நூதன சித்திபோல் விளங்கி உயிர்வாழ்வு வீணுகானம்போல் இனிமையாகவாவது, உண்மையும் ஆண்மையும் அல்லது உறுதியும் பராக்கிரமு மளிப்பதாகவாவது முடிகிறது.

"5. இனிப்பயமில்லை யென்று ஒரு உறுதியும், எதனாலும் குலையாத சாந்தகுணமும் பிறரிடத்தில் அன்பும் தயவும் ஆதரிப்பும் காட்டுகிற சத்குணசம்பத்தும் கிடைக்கிறது."

"இவைகளுக்கு உதாரணங்கள் எடுத்துக்காட்டி நிரூபிப்பதில் பிறர் அனுபவங்களை யெடுத்துச் சொல்கையிலேயே நமக்கு மனங் குழைந்து போய்விட்டது. இனி மனதைக் குழையவிடாது திடமாய்நின்று திரமாய் விசாரிப்போ"மென்று அவருடைய அபிப்பிராயத்தைச் சொல்லத் துவக்குகிறார். முதலாவது, 'ஆத்மானுபவம் எல்லாரிடத்திலும் ஒரேவிதமாய் இருக்கவேண்டுமென்று நினைப்பது சுத்தப்பிசகு: சாஸ்திரரீதியாகவும் உண்மைக்கு ஒத்ததாகவுமிருக்க அப்படியிருக்கவேண்டு மென்கிற அவசியமுமில்லை' யென்கிறார். எனக்கு குருமணியாய் வந்தவதரித்த பெண்மணி இந்த வுண்மையை வெகுநன்றாகவெடுத்துச் சொன்னாள். "ஞானிகள் எப்படியிருப்பார்கள்? என்றால், எப்படி வேண்டுமோ அப்படியிருப்பார்கள். அவர்கள் நடத்தையை ஒருவிதமாக வரையறுத்துச் சொல்ல முடியாது"என்றார்.

'மதவிஷயமாகக் கற்றும் கேட்டும் அறிவது பிரயோஜனமில்லை; உண்மை வழியில் நடந்துப்யவேண்டும்' என்கிறார். இதுவும் ஒரு மேலான உண்மையே. 'வாசாஞானம் உபயோகமில்லை'யென்றும் சொல்கிறார். அனுபவத்திலறிந்ததே உண்மையாதலால் "Science of religions may not be equivalent for living religion", 'வேதாந்த ஞானம் அனுபவஞானத்துக்கிடாகாது', என்கிறார்.

* "பார்வையிரண்டுண்டு பகிரகமுக மென்பா" என்றதன் கருத்தை விரித்துரைத்து, பகிர்முகப் பார்வையில் நாம் எவ்வளவு நினைத்தாலும், அறிந்தாலும், பேசினாலும்; உள்ளத்திலும் (அந்தர்முகப்பார்வையிலும்) அவை தோன்றல்வேண்டும்: இல்லாவிடில் பகிர்முகஞானம் பிரயோஜனப்படாது! அதற்கும் நமக்கும் சம்பந்தமில்லை யென்று காட்டுகிறார். "உள்ளம் பெருகி உளம்பூரிக்கவேண்டும்" என்பாள் என்தாய். அது எப்படியென்றால் "உள்ளம் உருக உருகக் கள்ளம் கருகக்கருக" உளம்பூரிக்குமென்பாள். இவர் உள்ளனுபவத்தின் உண்மையை மனோதத்துவங்களை யொட்டி நன்றாக விளக்கிக் காட்டுகிறார்: இதைவிளக்கிக்காட்டி, உண்மையில் கடைத்தேறவேண்டுமோனால் அவனவன் அவன் மட்டி லுழைத்துக் கடைத்தேற வேண்டுமேயன்றி பிறர்கொடுத்து வாரிக்கட்டிக்கொள்ளலாமென்று நினைப்பது சுத்தப்பிசகென்று மனோதத்துவ முறைப்படி நிரூபித்துக் காட்டுகிறார்.

"தானேயுழைத்துத் தானவ னானற்கு வானவர்
கோன்குழைந் தாழியஞ் செய்வனே."—என்பது இவ்வுண்மையை விளக்கும் குருமொழி.

பக்தர்கள் முத்தர்கள் எண்ணங்கள், அவர்கள் அனுசரித்த மார்க்கங்கள், செய்த பூஜைகள், மந்திர தந்திரங்கள், கடைசியில் அவர்கள் சித்தி பெற்றபின் அவர்களுடைய நடத்தைகள், இவைகளை நுட்பமாக அனுதாபமின்றி ஆராய்ந்து பார்த்ததில், எல்லாரிடத்திலும் ஏற்றத் தாழ்ச்சியின்றி ஒரே ரீதியாக உண்மையாய் விளங்குவது இரண்டு,—ஒரு தலைப்பில் அவர்கள் எண்ணங்களும், மறுதலைப்பில் நடத்தைகளும் பொருந்தியிருப்பது, ஸ்பஷ்டமாய் விளங்குகிறது: எண்ணம் போலிருக்கும் நடத்தை யென்பது ஒரு மாறுவிதியாக விருக்கிறது—என்று வெகு பாடுபட்டு ஆராய்ந்து இந்த உண்மையை வற்புறுத்துகிறார். இந்த மகா உண்மையை "மனம் போலிருக்கும் மாங்கல்யம்" என்னும் அழகான பழமொழியில் அமர்ந்து கிடக்கக் காணலாம். இதன் தத்துவத்தை ஏற்கனவே **விவேகசிந்தாமணி**யில் விளக்கிக் காட்டியெழுதியிருப்பதால் விரிவஞ்சி இம்மட்டு நிறுத்துவோம்.

மற்றொரு பெரிய உண்மையையும் கண்டு வற்புறுத்துகிறார். அது என்னவெனில் "பக்தி"; இதை "faith-state" என்று சொல்கிறார். 'பக்தியில்லாத ஜன்மம் பாழ்' என்று 'கௌன்ட் லியோ டால்ஸ்டாய்' † சொல்லியிருப்பது வாஸ்தவமென்றும், எந்த விதத்தில் பார்த்தாலும் அது உண்மையென்றும் வற்புறுத்திக் கூறுகிறார். பக்திரஸத்தைப் பற்றிச் சிறிது விரித்து, பக்தியுண்டானால் சிரத்தையும் தானே யுண்டாகிறது என்கிறார். நம்மவர்கள் இதனுண்மையறிந்தே 'பக்தி சிரத்தை' யென்று இரண்டையும் இணைபிரியாது கூட்டிச் சொல்வது வழக்கம். இதனுண்மையறிந்த ஸ்வானுபவச் செல்வியாம் என்தாய் பக்திக்கும் சிரத்தைக்கு முள்ள உறவை வெகு அழகாக வெடுத்துச் செப்பினாள்: "அப்பா குழந்தாய், பக்தியும் சிரத்தையும் மனிதருக்குள்ள இரண்டு கால்கள் போல், கடவுளைத் தேடிச் செல்வோர் கடவுளை வழிபட்டு நடக்கும் இரண்டு அற்புதக்கால்களாம். கால்கள் எப்படி ஒன்று முந்தினால் மற்றொன்று அதற்கு முன்னால் முந்தி, பின்னொன்று அதற்கும் முன்னால் முந்தி, கால்களுடையவனை வழிதொலையச் சீக்கிரம் நடத்திக் கொண்டு போகின்றனவோ; அப்படிப்

* See At mavidya many[ari], அகண்டானந்தம்;

† Count Lss Tolstoy.

போல, பக்தியுள்ள மனதில் சிரத்தை யதிகரித்து, சிரத்தைக்குமேல் பக்திபதிகரித்து, இப்படி ஒன்றின்மேல் ஒன்ருகப் பெருகி பக்தியும் சிரத்தையும் முமுக்ஷுவை வெகு சீக்கிரத்தில் முத்தி வீடு கொண்டு போய்ச் சேர்க்குமப்பா" என்று அருட்சுவை மிக அமிர்த வருஷம் பொழிந்து செப்பினர். என்னை யருமையாய்ப் பெற்றெடுத்த ஆனந்தத்தாயை "அம்மா, ஸ்வாமி யிருக்கிருர் என்கிறீர்களே, அவரைப் பார்த்தீர்களா? அறிந்தீர்களா? அறியச் சொல்வீர்களா?" என்று வினவியபொழுது, "அப்பா, ஸர்வஜீவதயாபரனுன கடவுள் ஒருவர் இருக்கிருர். இது சத்தியம். ஆனுல் அவரைப் பற்றிச் சொல்லத் தெரியாது; அறியவும் முடியாது; ஆனுல் அனுபவிக்கத் தெரியும்; நான் அவரை யனுபவித்துக் கொண்டு ஆனந்தமாயிருக்கிறேன். நீயும் அனுபவித்துப் பார்த்தால் அப்போ தெரியும் அவருடைய ருசி. கல்கண்டு தித்திக்கிறது என்று கற்கண்டைத் தின்னறியாதவனுக்குச் சொல்லி யென்னபயன். நான் வாயில் கற்கண்டைப் போட்டுக்கொண்டு, வாயில் ஜலமூற நாவைநப்புக் கொட்டிக் காட்டினுல் அவனுக்கு என்ன தெரியும்; நப்புக்கொட்டுகிற சப்தம் கேட்குமேயன்றி யதன்சுவை யறியான். கற்கண்டை அவன் வாயில் போட்டு எப்படி யிருக்கிறதென்று கேட்டால் நப்புக்கொட்டிக் காட்டுவான்" என்பாள். இப்படி "பால்நினைந்தூட்டுந் தாயினும் பரிந்து" "பாவியேனுடைய வூனினையுருக்கி உள்ளொளி பெருக்கி உலப்பிலா ஆனந்தமாய தேனினைச்சொரிந்து" என்தாய் அடித்தடித் தூட்டி என்னை, யாளாக்கி விட்டது ஞாபகத்திற்கு வருகிறது. அதைநினைக்குந்தோறும் அவளன்பு இப்"புன்புலால் யாக்கை புரைபுரைகனிய"ப்புகுந்திட, என் "என்பெலாமுருக்கி எளியையாய் ஆண்ட" "நற்சோதி"யைச் "சிக்கெனப்பிடிக்க" யான் பட்டபாடுகள் மனக்கண்முன்தோன்ற இப்புன்மையனுக்கும் இப்பாக்கியம் கிடைத்ததேயென்றதிசயம் மேலெழுந்து பொங்குகிறது. இந்த அனுபவ சிலாக்கியத்தை இங்கிவர் இப்படிச் சொல்கிருர்: "*God is not known, he is not understood; he is used.*" "If he makes himself useful, the religious consciousness asks for no more than that" என்கிருர். இரண்டுக்கும் வித்யாசமில்லை. கடவுளோடைக்கியமாயனுபவிக்கும் சுகத்தை என்தாய் போதித்த வண்ணம் **ஆனந்தத்தாய்மொழி**யிலிருந்து எடுத்துக் கீழேவரைகிறேன்:—

"சுகமேதானுனும் சுகமென்ருல் தித்திக்குமோ?
தின்னறியவேண்டியது இன்பசுகாசமதனை
இன்பசுகாசமதனைத் தின்னுருசியறிந்தாலும்
அறிந்த அறிவழிய வேண்டும்—
அப்புறந்தானையா சுகம்
அந்த சுகமதனையறிந்துசொல்வ தெப்படிச்சொல்!
அறிவழிந்தசுகமதனை யனுபவித்தேயறியவேண்டும்."

இது விஷயமாக ப்ரொபெஸ்ஸர் ஜேம்ஸ் வற்புறுத்திக் கூறுவது மிகவும் நன்ருயிருக்கிறது. கடவுள் ஒருவர் இருக்கிருரா இல்லையாவென்பது கேள்வியில்லை. "கடவுளு நானுமொன்ருனேன்" என்று பெரியோர் கூறியநிலை யனுபவிக்கக் கூடியதா இல்லையா? அது கூடியதானகாலத்தில் மற்றக் கேள்விகளுக் கிடமெங்கே.* இதைப்பற்றி அவர் முடிவாகச் சொல்லும் அபிப்பிராயம் என்னவெனில், "Religion must be conisidered vindicated in a certain way from the attack of her critics." "மதம் அனுவசியமென்று சொல்லக்கூடாது: அது அவசியமானதே" யென்பதாம்.

* "Not God, but life, more life, a larger, richer, more satisfying life, is in the last analysis the end of religon. The love of life at any and every level of development is the religious impule."—See . 507, of his book.

ஓம். ஸ்ரீ.

திருமயிலையில்

## 'திருவள்ளுவர் சமாதி தரிசனம்.'*



துதி.

சிந்தனையுனக்குத்தந்தேன் திருவருளெனக்குத்தந்தாய்
வந்தனையுனக்குத்தந்தேன் மலரடியெனக்குத்தந்தாய்
பைந்துணருனக்குத்தந்தேன் பரகதியெனக்குத்தந்தாய்
கந்தனைப்பயந்தமாதே கருத்தினிலிருக்குந்தேவே.—*Adapted.*

INTERNAL OR TRUE SPIRITUAL WORSHIP. †

## உட்சமய ஆராதனை.

வாயுதாரணை.

‡ "கும்பகத்தி னுள்ளே குறித்தரனைத் தானோக்கில்
தும்பிபோ னிற்குந் தொடர்ந்து."

(அர்ச்சனைமுறை.)

1. மண்டலங்கள் மூன்று மருவ வுடனிருத்தி
அண்டானை யர்ச்சிக்கு மாறு.

2. ஆசனத்தைக் கட்டி யரன்றன்னை யர்ச்சித்து
பூசனைசெய் துள்ளே புணர்.

3. உள்ளமே பீடம் உணர்வே சிவலிங்கம்
தெள்ளிய ரர்ச்சிக்கு மாறு.

4. ஆதாரத் துள்ளே யறிந்து சிவனுருவை
பேதமற வர்ச்சிக்கு மாறு.

5. பூரித் திருந்து புணர்ந்து சிவனுருவை
பாரித்தங் கர்ச்சிக்கு மாறு.

6. விளக்குறு சிந்தையான் மெய்ப்பொருளைக் கண்டு
[1] துளக்கற வர்ச்சிக்கு மாறு.

7. பிண்டத்தி னுள்ளே போந்திறைவனைக்
கண்டுதா னர்ச்சிக்கு மாறு.

8. மந்திரங்க ளெல்லா மயங்காம லுண்ணினைந்து
முந்தரனை யர்ச்சிக்கு மாறு.

9. போக்கருத்தினுற் பிண்டத்தி னுண்ணினைந்து
ஆராதனை செய்யு மாறு.

10. உள்ளத்தி னுள்ளே யுறப்பார்த்தங் கொண்சு
மெள்ளத்தா னர்ச்சிக்கு மாறு. [டரை

* 'சமாதிதரிசனம்'-இப்பதத்தை ஆத்மார்த்தமாக வுணரவேண்டியது. இந்த தரிசன மகத்துவத்தை வார்த்தைகளால் விளக்குவது கூடாதாயினும் ஒரு உதாரணத்தால் விளக்குவோம். சநகாதி நால்வர் பரமசிவனிடத்தில் உபதேசம் பெறச்சென்றபோது அவர் கல்லால நீழலில் தக்ஷிணாமூர்த்தி ரூபமாயிருந்து சின்முத்திரைகாட்டி மனதையடக்கவழி 'இப்படியிரு'வென்று சமாதியிலிருந்து காட்டின காக்ஷியை சநகாதி நால்வரும் கண்டுயந்ததே 'சமாதிதரிசனமாம்.'

(சின்முத்திரையென்பது ஆட்காட்டி விரலையும் கட்டைவிரலையும் ஒன்றுசேர்த்து சீவனும் பரமனுமொன்று எனச்சொல்லாமற் சொல்லும் குறியாம். இதை சற்குரு விளக்கிக்காட்டினாலன்றி உண்மை விளங்காது.)

† *cf* "God is Spirit and they that worship Him must worship in spirt and truth."

‡ இக்குறியிட்டதும் பின்வரும் 1-45 இலக்கமிட்ட ஈரடிகளும் ஔவையார் அருளிச்செய்தவை.

1. துளக்கம்—அச்சம், ஒளி. இங்கு 'அச்சமற' எனக் கொள்ளல் பொருந்தும்.

(பக்திபூசனை.)

11. பாடியு மாடியும் பல்காலும் நேசித்துத்
தேடுஞ் சிவ சிந்தையால்.

12. அன்பா லழுது மலறியும் ஆள்வானை
யென்புருகி யுள்ளே நினை.

13. கண்ணா லுறப்பார்த்துக் காதலாற் றுனோக்கில்
உண்ணுமே யீச னொளி.

4. அடியார்க் கடியரா யன்புருகித் தம்முள்
படியொன்றிப் பார்த்துக் கொளல்.

15. ஈசனெனக் கருதி யெல்லா வுயிர்களையும்
நேசத்தால் நீநினைந்து கொள்.

16. மெய்ம்மயிர் கூர விதிர்ப்புற்று வேர்த்தெழுந்து
பொய்ம்மையி லீசனைப் போற்று.

17. செறிந்தறிந்து நாடிச் செவ்விதா யுள்ளே
அறிந்தானை யாய்ந்து கொளல்.

(நினைப்புறுதல்.)

18. கருத்துறப் பார்த்துக் கலங்காம லுள்ளத்
திருத்திச் சிவனை நினை.

19. குண்டலியி னுள்ளே குறித்தானைச் சிந்தித்து
மண்டலங்கள் மேலாகப் பார்.

20. மிக்க மனத்தால் மிகநினைந்து சிந்திக்கில்
ஒக்கச் சிவனுருவ மாம்.

21. வேண்டுவார் வேண்டும் வகைதான் விரித்தெங்
காண்டற் கரிதாஞ் சிவம். [குங்

(அபயஸ்தம்.)

22. நெஞ்சகத் துனோக்கி நினைப்பவர்க் கல்லால்
அஞ்ச லென்னாது சிவம்.

23. பற்றலா தொன்றைப் பற்றினா லல்லது
கற்றதனா லென்ன பயன்.

24. தம்மை யறிவாரைத் தாமறிந்து கொண்டபின்
தம்மை யறிவரோ தான்.

(ஆனந்தம்.)

25. இமையாத நாட்டத் திருந்துணர் வாருக்
கமையாத வானந்த மாம்.

(முத்தி.)

26. துரியங் கடந்த சுடரொளியைக் கண்டால்
மரணம் பிறப்பில்லை வீடு.

(மௌனம்.)

27. சாகா திருந்த தலமே மவுனமது
ஏகாந்த மாக விரு.

(மௌனகுரு.)

28. வெளியில் விளைந்த வெளியின் கனிதான்
ஒளியி லொளியா யுறும்.

(குருதரிசனம்.)

29. உருவந் தழலாக வுள்ளத்தே சென்று
புருவத் திடையிருந்து பார்.

30. புருவத் திடையிருந்து புண்ணியனைக் காணில்
உருவற்று நிற்கு முடம்பு.

31. அஞ்சு மடக்கி யறிவோ டிருந்தபின்
துஞ்சுவ தில்லை யுடம்பு.

32. பற்றற்று நின்ற பழம்பொருளைச் சிந்திக்கில்
முற்று மழியா துடம்பு.

(ஐக்கியநிலை-ஞானம் பிரியாமை.)

33. குருவாம் பரனந்தி கூடல் குறித்தாங்
கிருபோது நீங்கா திரு.

34. சுந்தரச் சோதி துலங்கு மிடமது
மந்திரச் சக்கரமு மாம்.

35. தூராதி தூரஞ் சொல்லத் தொலையாது
பாராப் பராபரம் பார்.

36. ஈரொளி யீதென் றிறைவ னுறைத்தனன்
நீரொளி மீது நிலை.

37. அந்தமு மாதியு மில்லா வரும்பொருள்
சுந்தர ஞானச் சுடர்.

(குருமொழி.)

38. இதுமுத்தி சாதனமென் றேட்டில் வரைந்து
பதிவைத்தனன் குரு பார்.

(குருவழி.)

39. குருவி னடிபணிந்து கூடுவ தல்லார்க்
கருவமாய் நிற்குஞ் சிவம்.

40. தலைப்பட்ட சற்குருவின் சன்னிதியி லல்லால்
வலைப்பட்ட மானதுவே யாம்.

41. நெறிபட்ட சற்குரு நேர்வழி காட்டில்
பிறிவற் றிருக்குஞ் சிவம்.

42. ஒன்றி லொன்ருத மனமுடையா ருடல்
என்று மொன்ருது சிவம்.

43. நாட்டமில்லாத விடம் நாட்ட மறிந்தபின்
மீட்டு விடாது சிவம்.

44. பஞ்சமா சத்த மறுப்பவர்க் கல்லாஅல்
அஞ்ச லென்ஞது சிவம்.

(அவன் துணை.)

45. தோன்ருத தூயவெளி தோன்றியக்கா லுன்
தோன்ருமற் காப்ப தறிவு. [னைத்

(துறவியல்.)

அறிவே குருவாய்ச்சின் ருங்காரம் போக்குவிக்கச்
செறிவே துறவாமென் றறி.

(என்தாய்.)

தள்ளையவள்தான் வெள்ளையுருவினள் தயவு மிகுந்தி
பிள்ளையுருவினைப் பெருவெளி யாக்கினள். [யாற்

(முடிவுரை.)

ஆக்கினளென்ரு யாயினஞனே யுள்ளுற நோக்கிடில்
ஆக்கினளாயின னிருவரு மொன்றே.

ஓம் தத் ஸத்.

சிவோஹம்.

THE ILIAD OF HOMER.

ஹோமர் என்னும் மகாகவிபாடிய

# இலியயுத்தம்.

## முதற்காண்டம்.

(115-வது பக்கத் தொடர்ச்சி.)

அகமம்னனுக்கும் அக்கிலனுக்கும் பிணக்கம்.

வேறு.

66. அறைந்த சொற்கடன் செவிப்புக வக்கிலனென்பான்
நிறைந்த சிந்தையுஞ் சிற்றமு நெஞ்சிடைநிமிர
மறந்தவா நெடுவாளுறை கழித்தனன் மன்னை
இறந்து வீழலின் றெறிவனென் றுடன்றன னெழுந்தான்.

(இ-ள்) இவ்வாறு கூறியவார்த்தைகளைக் கேட்டமாத்திரத்தில் அக்கிலனுக்குக் கோபமும் வியசனமும் மேலிட்டுத் தனது கூரியவாளையுருவிக்கொண்டு அகமம்னனை ஒரேவெட்டாய் வெட்டித் துணிக்கின்றேனென்று கோபித்தெழுந்தான்.

67. எழுந்த வெஞ்சினப் பெருங்கன லியல்பினிலவிய
அழுந்து நெஞ்சினிலறிவெனுங் குளிர்புனல் பெருகக்
கழுந்தர் செய்செயல் கருதுதனெறியல வெனக்கொண்
டொழிந்துமேவின னென்றேயொன்று றழ்வுறு முளைத்தான்.

(இ-ள்.) பொங்கி யெழுந்த கோபத்தீயானது அவிந்து போகும்படி அக்கோபம் அழுந்திய நெஞ்சில் அறிவென்னும் குளிர்ந்த ஜலம் பெருக்கம் கொள்ள, அக்கோபம் நீங்கி அறிவாலாலோசித்து அறி

வில்லாத மூடர்கள் செய்யும் காரியத்தை நாம் செய்தல் முறையன்றென்று கருதி ஒன்றோடொன்று விகற்பப் படுகின்ற பல வெண்ணங்கள் மாறிமாறித் தோன்றும் உள்ளத்தனாகிய அவ்வக்கிலன் அரசனைக்கொல்ல வெண்ணிய எண்ணத்தை மாற்றினன்.

68. யாதுசெய்வ தென்றறிந்தில னிலங்கு தன்வடிவாள்
பாதிவள்ளுறை யுறைந்திடப் பற்றினனிருப்ப
ஓதும்விண்ணினின் றிழிந்தனள் யூனெவின் பணியாற்
போதமேவிய மினரவைப் பொலங்கொடிமாதோ.

(இ-ள்.) இன்னது செய்வதென்றறியானாகித் தான் உருவியவாளைப்பாதி யுறையிற்செருகிய வண்ணம் பிடித்திருப்ப அச்சமயத்தில் யூனோவென்னும் தேவராணியின் கட்டளையாலே மினாவையென்னும் தெய்வப்பெண் ஒருவள் வானுலகில் நின்று இறங்கி வந்தனள்.

69. போந்தவவ்வணங் கக்கிலன் பின்புறத்திருந்து
சேந்தவன் முடிபற்றின ளீர்த்தலுந்திரும்பி
ஏந்தல்யாவ ரென்றங்ஙனநோக்கலுமிலங்கிக்
காந்தி வீசுறுங்கண்களாலிவளைய வென்றறிந்தான்.

(இ-ள்.) அவ்வாறு வந்த அவ்வணங்கு அக்கிலன் பின்புறத்தில் நின்று அவன் முடியைப்பற்றி யிழுக்க அவன் யாவரென்று திரும்பிப் பார்த்தவுடனே அவளது கண்களினின்று வீசிய ஒளியினால் அவளை இன்னாளென்று தெரிந்துகொண்டான்.

70. வனப்பு மேவுரு மற்றவர்க் கறிவற மறைத்துத்
தனக்கு மாத்திரந் தெரிவுறத் தகையினில்விளக்கி
இனிக்கவே முனமெழுந்திடு மியலுறுமணங்கைக்
கனக்க நோக்கின னின்னணங்கழ றின்னவனே.

(இ-ள்.) அழகு பொருந்திய தனது ரூபத்தை மற்றவர்களுக்குச் சிறிதும் காணக்கூடாதபடி மறைத்துத் தனக்கு மாத்திரம் தெரியும்படிக் காட்டி இனிமையாகத் தோன்றிய அவ்வழகிய தெய்வகன்னிகையை அக்கிலன் கவுரவப்படுத்தும் பாவனையாகப்பார்த்து அவளுடன் பின்வருமாறு கூறலாயினன்.

71. அன்பினாலெனை யளித்திடு மாசையாலீங்கு
வன்புறசெய்யு மிவ்வகமனன் கொடுமையால் வருகும்
துன்பியாவையுங் காணுமாச் சுடரு நீள்விண்ணின்
றிம்பரேகினை போலுநீ யெம்மையாளிறைவீ.

(இ-ள்.) என்னை அடிமை கொள்ளும் தெய்வமே, என்னிடத்தில் வைத்த பிரீதியினாலும் என்னை ரக்ஷிக்கும் ஆசையினாலும், எனக்கு அக்கிரமங்களைச் செய்யும் இந்த அகமம்னனாலுண்டாகும் துன்பங்களெல்லாவற்றையும் கண்ணாரக்காணவந்தாய்போலும்.

72. துணிந்து செய்கொடும்பிழைகளைத் துன்னினை நோக்கும்
அணங்கினாரசே யினியப்பிழையிழைத்த
குணங்கெடுங்கொடுங் கொற்றவனுயிர் தனைக்குடித்துத்
திணிந்த வெம்பகை தீர்த்திடுந் திறனையுங்காண்டி.

(இ-ள்.) அரசன் எனக்குத் துணிந்து செய்த கொடிய குற்றங்களைப் பிரத்தியக்ஷமாக இங்கு வந்து பார்த்த தேவீ இனிமேல் நான் அக்குற்றங்களைச்செய்த நற்குணமில்லாத கொடிய அரசனைக்கொன்று என்பகையைத்தீர்த்துக்கொள்ளும் சாமர்த்தியத்தையும் உனக்குக்காட்டித் தருகிறேன்பார்—என்று கூறினன்.

73. விளம்பு மவ்வுரை செவியுற மினரவை யுரைப்பாள்
உளம்புழுங்கிடேலுன் சினமொழித்திடற் பொருட்டே
வளம்பிறங்கு நீள் வானகந் துறந்தனன் வந்தேன்
தளம்புமாரருள் யூனெவின் பணிதலை தாங்கி.

(இ-ள்.) இவ்வாறு கூறிய வார்த்தைகளைக் கேட்டமாத்திரத்தில் மினரவை சொல்லுகின்றாள் நீகோபியாதே. உன் கோபத்தை ஆற்றிடற் பொருட்டே அருள் நிறைந்த யூனோவின் கட்டளையால் வானகத்தைவிட்டு இங்கு நான் வரலானேன்.

74. வானநாயகி கட்டளை யிதனை நீ மறுக்கேகல்
ஊன நீங்கிய மனத்தினையுணர் வினுக்களித்து
மானவாளுறை செறிக்குக மன்னனைச்சிந்தை
ஈன மாம்வசை யெனுந்தழ லெரித்திட விடுத்தே.

(இ-ள்.) வானநாயகியாகிய யூனோவின் கட்டளையாகியவிதனை நீ மறுத்திடாதே. குற்றமற்ற உன்மனத்தில் அறிவை ஓங்குவித்து உருவியகத்தியை உறையில் இடுக. அரசனை அவன் செய்த தீய செய்கையே தழல்போலச் சுட்டெரிக்கும்.

75. உரைக்கு மென்னுரையோருதி யுனக்குறு மிகழ்வைக்
கரைக்கவோக பகல்கணித்துளதன்று வெங்கதிர் வேல்
பரிக்கு மன்னவன் படைத்துணை வேண்டி நின்னுறுவன்
புரக்க வென்று பல்பொருள் கொடுபுகழ்ந்துனைப் புரிந்தே.

(இ-ள்) நான் சொல்லும் வார்த்தையை நினைவில் வைத்துக்கொள். உனக்கு அகமம்னனால் நேர்ந்த அபமானம் நீங்க ஒரு நாள் வருதற்குள்ளது. அப்போது அரசன் உன்னை வந்தடுத்து அநேக பொருள்களை உனக்குக் காணிக்கைவைத்து உன்னை விரும்பித் தோத்திரம் செய்து உன்னைப்படைத் துணையாக வரவேண்டுமென்று வருந்திவேண்டிக்கொள்வான்.

(இன்னும் வரும்)

எஸ். முத்து ஐயர், பி. எ.

## OBITUARY.

## மரணங்கள்.

சென்ற மாதத்திலும் இந்த மாதத்திலும் இவ்விராஜதானியில் பல துறையிலும் பேர்பெற்று விளங்கிய பலர் காலஞ்சென்றுபோனார்கள்.

(1) பல்லாரியில் பாரிவர்த்தகராயிருந்தவரும், பரோபகாரியும், சிலகாலம் சட்ட நிரூபணசபை மெம்பராயிருந்தவருமான **ராவ் பஹதூர் ஏ. சபாபதி முதலியார்** அவர்கள் சென்றமாசம் சென்னையில் காலஞ் சென்றார். இவர் தர்மிஷ்டர். ஜனங்களுக்கு உபகாரமாக எவ்வளவோ உதவி செய்தார். வியாபார விஷயங்களில் துணிந்து இந்தியா முழுமையிலும், இங்கிலாந்திலும்கூட இவர்பேர் பரவ வியாபாரஞ் செய்துவந்தார். கிருஷி விஷயமாக அனேக சீர்திருத்தங்கள் செய்ய ஒத்தாசை செய்தார். வியாபாரத்தில் நஷ்டம் வரவே, இவர் முன்போல் வெளியரங்கத்திலுழைக்காது அந்தரங்கத்திலுழைத்து வந்தார். இவருடைய மரணம் இவரை யறிந்த பலராலும் விசனிக்கத்தக்கது. இவருடைய ஞாபகார்த்தம் பெல்லாரியில் இவர் உருவத்தைச் சிலையிலடித்து வைக்க இவருடைய நேசர்கள் தீர்மானித் திருக்கிறார்கள்.

(2) ஸர். **அமராவதி சேஷய்ய சாஸ்திரியார்** அவர்களும் கும்பகோணத்தில் காலஞ்சென்றுவிட்டார். இவர் பௌவல் துரையின் கீழ் இங்கிலீஷ் படித்துப் பிரபலரான வாலிபர்களில் ஒருவர். பிரிடிஷ் துரைத்தனத்தார் சேவகத்தில் முதலிலமர்ந்து சீக்கிரத்தில்தானே தாசில்தார் வேலைக்கு வந்து படிப்படியாக மேலேறிக் கடைசியில் ரெவினியூ போர்டு சிரஸ்தேதார் பதவிக்கு வந்தார். அந்த வேலையிலிருக்கும்பொழுது ரெவினியூ போர்டு மெம்பர்கள் இவருடைய திறமையையும் உத்தியோக சாமர்த்தியத்தையும் நன்கு மதித்து இவருடைய ஆலோசனையை மிகவும் நாடி வந்தார்கள். அங்கிருந்து ஸர். டி. மாதவராயருக்குப் பின் திருவாங்கூர் திவானாகச் சென்று அங்கே நல்ல பேரெடுத்தி; பிறகு பலவருஷங்கள் புதுக்கோட்டையில் திவானாகவும், திவான் ரிஜெண்டாகவுமிருந்து அச்சிறு ஸமஸ்தானம் நிலைகுலைந்திருந்ததைச் சீர்திருத்தி அதை நல்ல பதவிக்குக் கொண்டுவந்தார். இவருடைய புத்தித் தெளிவும், சாமர்த்தியமும் இராஜ்ய தந்திர நிபுணத்துவமும் இந்தியாவுக்கு வந்த கவர்னர்கள், கவர்னர்-ஜெனரல்கள் எல்லாராலும் மிகமதித்துக் கொண்டாடப்பட்டு வந்தன. ஸ்தூலம் பெருத்து, வயோதிக திசையில் வெளியேற சாத்தியமில்லாதிருந்தாலும் இவர் மாளிகையின் மேல்மெத்தையிலிருந்தபடி உலகில் நடக்கும் விஷயங்களையெல்லாம் உள்ளபடி யறிந்துணர்ந்து அவைகளில் சிரத்தையெடுத்துக் கொண்டுவந்தார். கவர்னர்கள் இவரைத்தேடி இவர் வீடுசென்று பேட்டியளித்து வருவார்கள். ஸர் ஆர்தர் ஹாவ்லக்கு கவர்னராயிருந்தபொழுது இராஜதந்திரத்தில் தான் இவருக்கு சிஷ்யராயிருக்கவே யோக்கியதை யென்றுசொன்னார். இவர் புதுக்கோட்டையி லிருந்தபொழுது **விவேகசிந்தாமணியின்** உபயோகத்தை யறிந்து அதை அந்தச் சமஸ்தானத்திலுள்ள எல்லாபள்ளிகளிலும் படிக்க உபயோகப்படும்படி துரைத்தனச் செலவில் வாங்கியளித்தார். இவரை நாம் நேரில் பார்க்க நேர்ந்தபொழுது தாம் விவேகசிந்தாமணியை இடைவிடாது வாசித்து வருவதாகவும், தமிழ்ப்பத்திரிகைகளில் அதுமிகவும் சிறந்ததாயிருக்கக் காண்பதாகவும், அது பொருள்வகையில் போதுமான உதவியின்றி வருந்துவதைக் கேட்கத் தான் விசனிப்பதாகவும் சொல்லி, இவ்விராஜதானியிலுள்ள பிரதமவித்தியாதர பாடசாலைகளெல்லாவற்றிலும் உயர்ந்த பாடசாலைகளிலும் கலாசாலைகளிலுங்கூட அதையெல்லாரும் வாசித்து வருதல் மிக நன்மை பயக்குமென்றும் சொல்லி இப்பத்திரிகையினிடத்தில் மிக மதிப்புவைத்துள்ளவராகக் காட்டினார். இவருடைய சரித்திரமொன்று இங்கிலீஷில் புதுக்கோட்டை காலேஜ் ப்ரொபெஸ்ஸர் ம-ா-ா- காமேசுவரய்யர் அவர்களால் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. இவர் காலஞ்சென்றதால் இந்தியாவில் மகிமை பெற்றுவிளங்கிய முன் காலத்திய பிரபல மஹான்களில் கடைசியாயிருந்த ஒருவர் மறைந்தார்.

(3) கனம் மிஸ்டர் ஜி. எச். ஸடுவர்ட்.—வித்யா இலாகாத்தலைவராயிருந்த கனம் மிஸ்டர் ஜி. எச். ஸ்டுவர்ட் அவர்கள் சில நாள் தேக அசௌக்கிய

மாயிருந்து நாளது நவம்பர்மீ 8உ ஞாயிற்றுக் கிழ
மையன்று இரவு சென்னையில் காலஞ்சென்ருர்.
இவருக்கு வந்த வியாதி குணப்படும் போல்காட்டியும்
அது பிந்தி அதிகமாகி அவரை மாய்த்துவிட்டது.
1882-ம் வருஷம்][போர்ட்டர்துரை ஸ்தானத்தில்
கும்பகோணம் காலேஜ் தலைமை வகிக்குமாறு சீமை
யிலிருந்து வரவழைக்கப்பட்டார். கேம்ப்ரிட்ஜ் யூனி
வர்ஸிடியில் இவர் படித்துத்தேறினவர். கணித
சாஸ்திரத்தில் மஹா நிபுணரென்று பேர்பெற்றுத்
தேறியவர். அது விஷயமாக நடக்கும் கடின
மான பரீக்ஷையில் முதல்தரமாகத் தேறின "Wr-
angler" என்று சொல்லும் உயர்ந்த கீர்த்திபெற்
றவர். இவருடைய புத்திவன்மை யெல்லாராலும்
கொண்டாடப்பட்டுவந்தது. மூன்றுவருஷம் கும்ப
கோணத்திலிருந்து, பிறகு சென்னை பிரெஸி
டென்ஸி காலேஜுக்கு வந்தார். அங்கே சில
வருஷங்கள் பிரொபெஸ்ஸராயிருந்த பின் டாக்
டர் டங்கனுடைய ஸ்தானத்தில் இவர் காலேஜ் தலை
மையதிகாரம் வகிக்கலானுர். இவரைப்போல் அபா
ரசாமர்த்தியமுள்ளவர்கள் சாதாரணமாக இப்பொ
ழுது சென்னை வித்யா இலாகாவுக்கு வருகிறதில்லை.
பூனுவில் ஸ்ரீ புருஷோத்தம பராஞ்சபே ஒருவரே இவ
ரைப்போல் கீர்த்திபெற்று இத்தேசத்தில் வித்யாவி
ஷயமாக உழைத்துவருகிருர். இவருடைய புத்திசா
மர்த்தியத்தைக்கண்டு எல்லாரும் இவரை நன்கு மதி
த்தார்கள். புத்திவன்மை மிகுதியுமுண்டாணுலும்
அஃதோடு தான் போனதே போக்காய்ப் போகும்
குணமுமிருந்ததால் பொதுவிஷயங்களிலேனும்
மற்ற விஷயங்களிலேனும் வித்யா இலகா சம்பந்த
மாய் இவரை பொதுப் பிரயோஜனமான ஒருவழியில்
திருப்புவது சாத்தியமாகவில்லை. சுதேச பாஷைக
ளால் கெடுதலே யன்றி நன்மை யில்லையென்கிற
பாவம் இவருக்கு எப்படியோ மனதிற்பட்டுவிட்டது.
சுதேச பாஷாஞானம் இவருக்கு அதிகமாகவில்லை
யாதலால் அப்பாஷைகளின் குணமறிந்துகொண்ட
அபிப்பிராயம் என்று சொல்வதற்கில்லை. அப்பாஷை
யனுவசியமென்று தனக்குப்படவே அதை யெப்ப
டியும் தொலைத்துவிடுவதே சரியென்று நினைத்து
நடந்து வந்தார். இது இவர்மட்டில் சொந்தமாய்க்
கொண்ட அபிப்பிராயமா யுள்ளவரையில் இவர்மேல்
குற்றஞ் சொல்வதற்கில்லாமலிருந்தது. வித்யா இலா
காத் தலைவராய் வந்தபின்னும் இவர் இந்த அபிப்
பிராயத்தையே உத்தியோகமுறையிலும் தழுவி
யனுசரிக்கத் தலைப்பட்டது சுதேச பாஷா
பிமானிகள் எல்லாருக்கும் பெரும்பீதி விளைப்
பதாயிற்று. யூனிவர்ஸிடி கமிஷன்முன் யூனி
வர்ஸிடி பரீக்ஷை சம்பந்தமாக சுதேசபாஷை
களை அறநீக்கிவிடுவதே நலமென்று சொன்னதை
யவர்களும் அங்கீகரித்துச் சிபார்சுசெய்ய அது
பெரு வில்லங்கமாக முடிந்தது. இது விஷயமாகப்
பிந்தி பொதுஜன அபிப்பிராயம்பிரத்யக்ஷமாக வெளி
யிடப்பட்டதைக் கொண்டும், யூனிவர்ஸிடி ஸெனேட்
சபையிலே இந்தச் சிபார்சு அங்கீகார மானதல்ல
வென்று தள்ளப்பட்டதிலிருந்தும் இவர் தம்முடைய
சொந்த அபிப்பிராயத்தைத் தெரிவித்தாரென்றும்,
தன் உத்யோகப் பொறுப்பையும் வித்யா இலாகா
வின் உட்கருத்தையும் ஜனங்களின் க்ஷேமத்தையும்
கருதித் தம்அபிப்பிராயத்தை யாதரித்து பொதுஜன
அபிப்பிராயத்தையும் க்ஷேமத்தையும்நாடி இச்சிபார்சு
செய்தவராகத் தெரியவில்லை. சமீபகாலத்தில் பிர
தம வித்யாவிஷயமாகச் சிறிது சிரத்தை யெடுத்துக்
கொண்டு எதோ பிரதமபாடசாலைகளையும் அங்கு
போதிக்கப்படும் வித்யாமுறையையும் விர்த்திசெய்
வார்போல் தோற்றியது. அதுவும் ஒன்று மில்லா
மற்போயிற்று. இவர் வித்யா இலாகாத்தலைமை வகி
த்த நாலு வருஷகாலத்தில் வித்யாவிஷயமாக இவர்
செய்தசீர்திருத்தங்கள் ஒன்றும்விசேஷமாகச்சொல்
வதற்கில்லையாயினும், இவர்மட்டில் புத்தி வன்மையி
லும் சாமர்த்தியத்திலும் மிகச் சிறந்தவரென்பதிலும்
இவரைப்போல் மேதாவி வித்யா இலாகாவுக்கு இல
குவில்கிடைக்கமாட்டாரென்பதிலும் சந்தேகமில்லை.
இவர் இத்தேசத்திற்கு உத்யோகமாக வந்து 20-வரு
ஷங்களுக்குமேலாகின்றன. இன்னு மிரண்டொரு
வருஷங்களில் இவர் பென்ஷன் பெற்றுக்கொள்ளும்
படியான காலம் கிட்டி விடும். இந்த சமயத்தில்
இவர்தம் மனைவியையும்புத்திர மித்திரர்களையும் உத்
யோகத்தையும்விட்டுப் பிரிந்து போகும்படி இவருக்கு
மாணதிசை நேர்ந்தது மிகவும் விசனிக்கத் தக்கதே.
இவருடைய மனைவி மக்கள் மித்திரரோடும் இவரு
டைய சகோதரர் மிஸ்டர் எச். எ. ஸ்டுவர்ட்டோடும்
இது விஷயத்தில் எல்லாரும் அனுதாயப்படுவார்கள்.
நாமும் அனுதாபப்படுகிருேம்.

(4) வி. கோ. சூரியநாராயண சாஸ்திரிகள்,— கிறிஸ்தியன் காலேஜில் பிரதமதமிழ்ப் பண்டிதராயிருந்தம-ா-ா-ஸ்ரீ, வி. கோ. சூரியநாராயண சாஸ்திரியவர்கள், சிலவருஷங்களாக க்ஷயரோகத்தால் பிடிக்கப்பட்டிருந்து இந்தமாச முதலில் காலஞ்சென்றது மிகவும் விசனிக்கத் தக்கது. இவருக்கு வயசு 33-க்கு மேலாகவில்லை. இவ்வளவு இளவயதில் இப்படி அகால மரணமடைந்தது மிகவும் பரிதாபத்தைக் கிளப்புவதாயிருக்கிறது. இவருக்குப் பாலப்பருவமுதற்கொண்டு தமிழில் அபிமானம் அதிகம். இவ் விவேகசிந்தாமணியாரம்பிக்கப்பட்ட காலத்தில்இவர் சென்னை கிறிஸ்தியன் காலேஜில் பி. ஏ. பரீட்சைக்குப்படிக்கும் மாணவர்களில் ஒருவராயிருந்தார். அப்பொழுது விவேகசிந்தாமணிக்கு எழுதிவந்த செந்தமிழ்ப்பயிற்சி பெற்ற வாலிபசிகாமணிகளில் இவர் ஒருவராய்விளங்கினர். பி. ஏ. பரீக்ஷையிற்றேறினபின் கிறிஸ்தியன் காலேஜிலேயே ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதராக உத்யோகம் பெற, அதுமுதல் இவருக்கு இயற்கையாகத் தமிழிலுள்ள அபிமானம் மிகப்பெருகி, மேன்மேலும் தமிழ்ப் பாண்டித்தியம் பெற இவரைத் தூண்டியது. பிரதம தமிழ்ப் பண்டிதர் காலஞ் சென்றபின் இவருக்கு அந்த ஸ்தானம் கிடைக்கவே, காலேஜ் வகுப்பு மாணுக்கர்களுக்குத் தமிழ் போதிக்கவும், தமிழில் தனக்குள்ள அவாவினல், தம் மாணவருள்ளத்திலும் அது விஷயமாய் அவாவெழச் செய்யத்தூண்ட சந்தர்ப்பமும் கிடைத்தது. இந்த அருமையான சந்தர்ப்பங்களை இவர் நன்குபயோகிக்காது கைநழுவவிட்டார் என்று சொல்வதற்கில்லை. ஏனெனில் இவர் தாமே பல கிரந்தங்களியற்றினதன்றி இவர் மாணுக்கர்களில் தமிழ் வன்மை வாய்ந்தவர்களைத் தூண்டிவிட்டு அவர் மனம் உற்சாகப்படும்படிசெய்து அவர்களையும் பல கிரந்தங்கள் எழுதும்படிசெய்து அவைகளைத் தாமே பார்வையிட்டுத் தொகுத்துப் பதிப்பிக்க வித்யாசாதகமும் செய்தார். இவர் பண்டிதரான பிறகு சாமான்யஜனருமுணரும்படி எளிய நடையிலெழுதுவதைவிட உயர் நடைபற்றி பண்டிதர்களிக்கவே யெழுதித் தம் பாண்டித்தியத்தைக் காட்டி வந்தாராயினும், இவர் முயற்சியால் தமிழ் நூல்கள் விர்த்தியடைய நேர்ந்ததும், இவர் செல்வாக்குக்குட்பட்ட மாணவர்கள் வழக்கம்போல் தமிழை யசட்டைசெய்து தள்ளாது அதிலபிமானம் வைத்து ஆதரவாய்ப்போற்றியதும் தமிழுக்குப் பெரிதும் கிடைத்த ஒரு பாக்கியமே யென்று சொல்லல்வேண்டும். இவர் தம்மாணவர்களால் மட்டுமன்றி இவருடைய காலேஜ் ப்ரொபெஸ்ஸர்களாலும், மற்ற பண்டிதர்களாலும் நன்கு மதிக்கப்பட்டுவந்தார். இவருடைய நண்பர்கள் புலவரில் இவரைப்போல் பாண்டித்தியம்பெற்ற "அசலாம்பிகையம்மை" யென்னும் பிராம்மகுல வித்யாரத்னம் இவர் பிரிவாற்ருது பாடியது இரக்கமும் உருக்கமுமாயுள்ளதுபற்றி அவர் பாடிய இரங்கற் பாக்களில் முதலிரண்டையும் ஹிந்துநேசன் பத்திரிகையிலிருந்தெடுத்து இங்கு பிரசுரிக்கிறோம். அவை பின் வருமாறு:—

"சீரியூர்தஞ் சிரமணியாஞ் சிவநேயக்
கோவிந்த சிவனு ரென்னும்
பேரியைந்த தவமலையிற் பிறந்ததமிழ்
மதக்களிறே பீடார் நந்தம்
ஆரியநற் குலவிளக்கே யருந்தமிழ்ப்பெண்
விழிமணியே யமுதே தேசார்
சூரியநா ராயணப்பேர் புனையருமைச்
சோதரமே சுகுண மாலே."

"உலகிருளைப் புறத்தோட்டு மொருகடவுட்
டிருநாம முடைமைக் கேற்ப
அலகில்பல மாணவர்த மகவிருளைப்
புறத்தோட்டி யகிலந் தோன்ற
விலகொளியை மிகவிருக்கு மப்பரிதி
யெனமேதை விளக்கங் காட்டிப்
பலகலையு முலைந்தேரப் பண்ணியநின்
பெருங்கருணைப் பகரற் பாற்றே."

இவர் அகாலமரணமாகப் போனதைப்பற்றி இவர் பிரிவாற்ருது வருந்தும் வித்யாசோதரியாம் "அசலாம்பிகையம்மை" யோடும், வயது சென்ற பெரியவரான அவர் தாய்தந்தையரோடும், நோக்கூடாத விபத்து நேர்ந்துவிட்டதால் உள்ளம் நொந்து புண்பட்டுழலும் அவர் தர்மபத்தினியோடும், இளவயதிலே தந்தையாதரவிழந்த அவர் அருமைக்குழந்தைகளோடும் நாம் மனங்கலந்து உள்ளமுருகி வருந்துகிறோம். ஆனைமுதல் எறும்பீருக அண்ட

சராசரங்களையும் ஆட்டுவித்து லீலா விநோதமாக ஆக்கியழித்துக் காத்தருள் செய்யுமீசன், இவர்களுள்ள மறிந்து உண்மை விளங்கக் கருணைமிகுந்து இவர்களது துன்பந்துடைத்துத் தூய்நெறிகாட்டுவாரென்று திருவருட்சோதியை நினைந்து பிரார்த்திக்கிறோம். இவர்களுக்கு நாரூபமான நாம் என்ன ஆறுதலைச்சொல்வோம். "ஆறாத்துயரமெல்லாம் ஆற்றுவது ஈசன் அருள்," "மாறாக்கலக்கமெல்லாம் மாற்றிவிடும் மனோமௌனம்."

"பூட்டியிட்ட தேகமிது-போயழியு மெந்நாளும்
நாட்டிலுள்ள வாழ்வினுக்கு-நற்பெயரே கண்ட
[பலன்."
"சத்தியமேநன்மார்க்கந்-தவறுவருமற்றெதிலும்
வித்தையிதில்லாபமெத்த-விசுவாசம்மெத்த
[மெத்த."

---

* SHORT SAYINGS ON GREAT SUBJECTS.

(*By a Wandering Ascetic*)

## பேராற்றலைக் குறித்து

ஒரு பரதேசி சொல்லிய

## சிறுமாற்றங்கள்.

---

### தைரியம்.

இவ்வுலக வாழ்க்கையில் மேன்மை யடைவிப்பது தைரியமே. புகழிற்கு மூலகாரணமும் அதுவே. மேற்கொண்ட தொழிலிற்கேற்ற தைரியமிருத்தல் வேண்டும். தமக்கு நேரிடக்கூடும் தீங்கைச்சிறிதும் ஆலோசியாமல் தம் பக்தியிலுறுதியுற்ற சத்தியக் கொள்கைகளைத் தைரியமாய்ச் சனசமூகத்திற்கு எடுத்துரைத்தல் மேற்கூறிய தைரியத்தினுலேற்படும். நம்கொள்கைகளைக் குறித்துப் பழித்து நகையாடுவார்களே என்ற அச்சம் சிறிது மில்லாமல் நம் நம்பிக்கைகளை எடுத்துக் கூறல்வேண்டும், ஒருவனுக்கு ஒரு காரியத்தைச்செய்து முடிக்கத் திறமையிருக்கலாம். ஆனால் அவன் அதைச்செய்யும்பொழுது அச்சமடையில் யாதுபயன்? ஒரு விஷயத்தைப் பற்றித் தெரிந்தவர் அதையே எடுத்துச் சொல்ல திறமையில்லாதவராகின்றனர். சொல்ல முடியாமை தைரிய மின்மையாற்றான், என்று ஏற்படுகின்றது. தைரியமுடைமையே தீங்கினின்றும் ஒருவனைக் காப்பாற்றுவிக்கும். தைரியமே, மேலும் மேலும் எத்தொழிலையுஞ் செய்தற்கேற்ற ஊக்கத்தைக் தருகின்றது. கம்பர் சிறப்புப் பாயிரம் வாங்கிவா தைரியத்தை விடாததால் கமபாராமாயணமும் கம்பரும் இருக்கிறார்கள். புகழுறுவதற்கே தைரியத்தை மேற்கொள்ளுகின்றனர் அநேகர். மனசாக்ஷிக்கு நேர்மையானவற்றையும் கடமையாற்செய்ய வேண்டியதையும் பயன்றருவனவற்றையும் தைரியமாய்ச் சிலர் செய்து முடிக்கின்றனர். குப்பையிற்கிடந்தாலும் மாணிக்கத்தின் பெருமை சிறிதேனும் குறையாதவாறுபோல் எப்பயனை எதிர்பார்த்துத் தைரிய முற்றாலும் அக்குணமுடைமை மேன்மையே. தைரியம் புருஷலக்ஷணம். பலவித இல்லாத காரணங்களைக் கருதி பிறர் ஊக்கத்தையும் கெடுத்து தானும் கெடுகிறவனே ஆண்ரூபம். 'செய்யாத காரியம் செய்யத்துணிவதும்' † தைரியம் தானே. பொருள் கவர்வதும் தைரியம் தானே. 'தைரியமாவது ஒண்ணுவது, எல்லாம் காலத்தைப்போல நடக்க வேண்டு'மென்பார் பலர். அவர்களே உலகத்திற்கு சுவை, இனி காலத்தைப்பற்றிக் கவனிப்போம்.

### காலம்.

உலகத்திலடையக் கூடிய எல்லா நன்மைகளும் காலத்தைப் பற்றியவே. அநுபவிப்பதற்குக் காலமில்லாவிடின் சிநேகிதத்தாலேனும் புத்தகங்களாலேனும் சௌக்கியத்தாலேனும் தேசசஞ்சாரவின் பத்தினுலேனும் என்ன பயனையடையவரும். காலத்தை பணத்திற் கொப்பிடுவது வழக்கம். உயிருக்கு

---

* We make a present of these stray thoughts of a youthful ascetic (not yet 23 years old) who, attracted by the 'religious ideal,' has left home & parents to wander in quest of Truth or attain *Kaivalyam* (perfection), to those who would lightly lay their iconoclastic hands on the 'Religious Ideal' hallowed by traditions of ages & incrusted in words & deeds of every day life. He is not 'educated' in the sense in which it is now generally used. Of English he knows not a word & in Tamil his spelling is "awful bad" as the Inspecting School-master would remark. We have corrected his spelling but have left his ideas & sentences untouched. Ed. V. C.)

† We have generalised in these words the 'particular statement of the author.

ஒப்பிடுவதே மேன்மை. நாம் பயனின்றிக் கழிக்கும் விநாடிகள் யுகங்கள் புரளினும் மறுபடியும் அடையலாகுமா? சிலருக்கு இன்பமும், சிலருக்குத் துக்கமும் விளைதல், ஒரே காலவளவையைச் சிலர்க்கு அதிகமாகவும் சிலருக்கு குறைவாகவும் காட்டுதல், குற்றத்தைச்செய்து அதனை வெளியிடுதல் ஆகிய இத்தகைய மாறுதலையுடைய குணங்களுக்கெல்லாம் தலைவன் காலம். காலம் மனிதர்களுக்குகந்தாற் போலவும் நடக்கின்றது. சிலரிடத்து அது மெதுவாகப் பேசுகின்றது; சிலரிடத்து தவழ்கின்றது; கல்லாத மூடனிடத்து நடிக்கின்றது. காதலால் வருந்துபவரிடத்து மிகவும் மெதுவாகப் போகின்றது. விடுமுறைகாலங்களில் நியாயவாதிகளுடன் தாழ்கின்றது. சோம்பேரிகளே ஒரு காரியத்தைச் செய்யக்காலமில்லை யென்பார்கள். வேண்டுமென்று நூற்றால் வெண்ணெய்போல் நூற்கலாம். இன்ப மிருந்தால் எதுவும் செய்யலாம். முயற்சி செய்யாமலே காலத்தின்மேல் பழி போடுவார் அநேகர். காலத்தை வீணே கழிக்காமல் வாழும் வாழ்க்கையே மேலானதெனப் புகழலாம். ஒரு காரியத்தை இன்றைக்குச் செய்யலாம் நாளைக்குச் செய்யலாம் என்று நினைத்து நீடித்தல் மடமை. செய்யவேண்டியதை உடனே செய்யவேண்டும். காலமாகிய செம்படவன் மனிதர்களாகிய மீன்களை அவரவர்களுக்குப் பிரியமான உணவைத் தூண்டியில் வைத்துப் பிடிக்க முயலுகின்றான். சீக்கிரத்தில் அவன் தூண்டிலில் சிக்கிக்கொள்ளுகிறார்கள். காலம் பறப்பதாகப் பலர்கூறுவார்கள். காலத்தை வீணேகழிக்கும் நம்மினும் அது ஒடவில்லை. ஆதலால் நம்மால் இயன்ற உதவி செய்யவே காலம் ஏற்பட்டது. மேல்விசாரணை ஒன்று செய்யவேண்டும். அது,

### தன்முயற்சி.

நாம் அடைய விரும்பும் எப்பொருளையும் முயற்சியின்றி எய்துதலரிது. முயற்சிசெய்தால் எதுவும் முடியும். முடியாத காரியம் இவ்வுலகிலில்லை. மூடரே ஒருசெயலைச் செய்தல் முடியாது என்பர். நம்மவராளும் விதிக்கொள்கை முயற்சியைப் பெரிதும் தடைசெய்கின்றது. "ஊழிருந்தால் எதுவும் நாம் முயலாமலே வந்துறும்" என்னுங்கூற்று அடிக்கடி கேள்விப் பட்டிருக்கிறோம். மேலும் சோதிடர் வாய்மொழியில் நம்பிக்கையுள்ளவர் அதிகமாக முயற்சி செய்வதில்லை. ஒரு நோயுற்றோன் பிழைத்திருக்க வேண்டுமென்று மருந்து கொடுக்கவேண்டுவது அவசியம். அவ்வாறிருப்ப அநேகர் 'பிழைத்திருக்க வேண்டுமென்று பிரமன் விதித்தனனாயின் மருந்தின்றியே நோய் தீரும், இல்லையேல் எப்படியும் இறப்பான்' என்கின்றனர். இச்சந்தர்ப்பத்தில் அன்னார்

தெய்வத்தானாகா தெனினும் முயற்சிதன்
மெய்வருந்தக் கூலிதரும்.

(என்பதனுண்மையை உணர்வதில்லை. தானே முயற்சிசெய்யாமற் பிறர்மேற் பழியிருத்தலொண்ணாது. காலமறிந்தும் இடமறிந்தும் முயற்சி செய்தல் வேண்டும். தன்முயற்சியின்றிக் கடவுள் கொடுப்பார் என்று நம்பினால் செல்வனாதல்கூடுமோ? அருங்கலத்திட்டபாலடிசிலைக் கையாலுண்ணாமற் போனால் எவ்வாறு பசி தீரும். தெய்வம்காட்டுமேயன்றி வாயிலூட்டாது என்று பழமொழி வழங்குகிறது. முயன்றும் ஒரு பொருள் கிட்டாவிடின் மனத்தளர்ச்சியடைதல் கூடாது. நமது ஊக்கத்தை மேன்மேலும் எழச்செய்தல் வேண்டும்: இப்பொழுது அடையும் துன்பங்களினும் இனி அடையும் இன்பத்திற்கு ஒரு அறிகுறி யென்று அதைநினைக்க வேண்டும். ஒருதொழிலைச்செய்யப் புகுந்தாற் பெரியதடைகள் வாராமலிரா, இடையில் வருங்கஷ்டங்களை நினைத்து வருந்துதல் மடமை. தைரியமாய் முயற்சியாகிய துணைவலி கொண்டெதிர்த்தலே மேன்மைக்குணம். ஆற்றுதைப் போரில் வீழ்த்தலே மேன்மை. வீரனோடு போர்புரிந்து வெல்லுதலே நலம். இறைவனளித்த திறமையைக்கொண்டு தம்தம் தொழில்களை முற்றுவிக்கின்றவனே வாழ்க்கைப் போரில் துன்பத்தியரைக்கடிந்து இன்பவெற்றிக்கொடி நாட்டுவோனாவான்.

---

EXTRACT.

## RAINBOW.—வானவில்.

---

வானவில்லையறியாதார் இவ்வுலகத்தில் ஒருவருமிலர். இதனையே இந்திரதனுசு என்றும் சொல்லுவார்கள். சூரியனுக்கு எதிரில் மழை பெய்யுங் காலத்தில் சூரியரஸ்மிகள் ஜலத்துளிகளின்மீதுவிழ அதிக அற்புதமானதும் மனதுக்கு ரம்மியமானதும்

சப்தவர்ணங்களுடன் கூடினவில்போன்ற ஓர் உருவம் ஆகாசத்தில் அடிவானத்துக்குச்சமீபத்தில் தோன்றும். உற்றுநோக்குங்கால் ஒன்றன்மேலொன்றாக இரண்டுவானவில் தோன்றும். உள்வானவில்லின் வர்ணரேகைகளின் அமைப்பானது தெளிவாயும் பிரகாசமாயுமிருக்கும். அதற்கு மேல்சொற்பம் இடைவிட்டுத்தோன்றும். மற்றொன்றின் வர்ணரேகையின் அமைப்பானது வர்ணங்களின் நிலைமை முறை மாறி அவ்வளவு பிரகாசமின்றி மங்கின நிறமுள்ளதாய்த் தோன்றும். சூரியன் அடிவானத்திலிருந்து நாற்பத்தைந்து டிக்கிரிக்கு மேல் உயர்ந்திருந்தால் வானவில் கண்ணுக்குத் தோன்றாது. அதாவது கண்ணுக்குத் தோன்றும் ஆகாசவளைவை நான்கு பாகமாகச்செய்யுங்கால் அடிவானத்திலிருந்து மேற்கிலும் கிழக்கிலும் கால்பாகம் இருக்குமிடத்திற்குள் சூரியன் இருந்தால் இந்திர தனுசுவின் தோற்றம் நம கண்களுக்குத்தோற்றும். இதற்குக் காரணமென்ன? சூரியனிடமிருந்து பார்க்கிற மனிதனுடைய கண்ணுக்கு நேர்கோடு இழுத்து அந்தக்கண்ணினிடமிருந்து சூரியனுக்கு எதிர்ப்புறமாக 45 டிக்கிரியுள்ள ஒருகோணத்தை ஏற்படுத்தினால் அந்தக் கோணத்தின்மேற்கோட்டின் எல்லைக்குள் பிரகாசமான வானவில்லானது தோன்றும். ஆகவே எல்லா மனிதர்களும் ஒரு உயரமுள்ளவர்களாகவும் ஒரே இடத்திலிருந்து பார்க்கக்கூடாத வர்களாயு மிருப்பதால் உண்மையில் 45 டிக்கிரியுள்ள கோணங்கள் பல உண்டாகின்றன. அதனால் யதார்த்தத்தில் பார்க்கிற பேர்கள் எத்தனைபேர்களோ அத்தனை வானவில் ஆகாசத்தில் ஏற்படும். அவனவன் பார்ப்பது ஒரு வானவில்லாயினும் அவனுடைய உயரத்துக்குத்தக்கபடி அவன் ஒன்றைப் பார்க்கிறான். மற்றொருவன் தானிருக்கிற இடத்திலிருந்து பார்க்கையில் மற்றொன்றைப் பார்க்கிறான். ஆகவே எல்லோரும் உண்மையில் ஒரே வானவில்லைப்பார்க்கவில்லை. ஆனால் பலபேர்கள் வானவில்லைப்பார்க்குங்காலத்தில் ஏறக்குறைய ஒரேயிடத்தில் ஒரே வானவில்லைப் பார்ப்பது போலவே நினைக்கிறார்கள். எல்லோரும் ஒரே குறிப்பிட்ட இடத்தை நோக்கி இதோ வானவில் தோற்றுகிறதென்று சுட்டிக்காட்டுகிறார்கள். இதற்குக்காரணம் என்னெனில் சூரியன் மிக்க தூரத்திலிருக்கிறபடியாலும் (9,20,00,000 மைல் தூரம்) பற்பல மனிதர்களுடைய உயரத்தின் அளவுமிகச்சொற்பமாயிருப்பதாலும் அல்லது அடிக்கணக்குகளாயிருப்பதாலும் மேற்கூறிய வித்தியாசங்களிருந்தும் தோற்றத்தில் இல்லாமல் பொய்த்துப்போகின்றன. இன்னும் ஆராயின் சூரியனுடைய ரஸ்மிகள் ஒன்றன்பின் ஒன்றாய்வருகின்ற ஜலத்துளிகளின் பிரவாகத்தின் மேல் பட்ட ஒவ்வொரு ஜலத்துளியும் ரஸ்மிகளைப் பிரித்துச் சித்திரம் எழுதினாற்போல் ஆகாசத்தில் தோற்றத்தையுண்டுபண்ணுகின்றது. ஒரு வினாடியில் பார்த்த ஜலத்துளிகள் கீழே விழுந்து ஜலத்துளி பிரவாகங்கள் வந்து கொண்டே இருக்க வான வில்லில் யாதொரு கீற்று அல்லது பிளப்பு இல்லாமல் சித்திரப்படம்போல் கோணாமற் குறுகாமல் இடைவிடாமல் வானவில்லின் தோற்றத்தைப்பார்க்கிறோம். இதற்குக்காரணமென்ன வெனில் பார்க்கிற நம் கண்ணில் உண்டாகும் பிம்பம் ஒவ்வொன்றும் அரைக்கால் வினாடி கால அளவு தங்கிப்பின் மறைகிறது. ஒரு பிம்பம் கண்ணில் பதிந்து அதுமறைகிறகாலத்துக்குள் அதேமாதிரியான மற்றொரு பிம்பம் ஒன்றன்பின் ஒன்றாய்த்தொடரும் பக்ஷத்தில் ஒரே பிம்பத்தைப் பார்க்கிறதுபோலவே நமக்குத்தோன்றும்.

இதைச் சிறுஉதாரணங்களால் நன்றாய்த் தெரிந்துகொள்ளலாம். புஸ்தகம் வாசிக்கும்பொழுது கண்கொட்டினபோதிலும் எழுத்துக்கள் ஒரே வரிசையாய்த் தோற்றுகின்றன. கொள்ளிக் கட்டையைச் சுற்றுங்கால் ஒரே கொள்ளிவட்டம் தோன்றுவது யாவரும் அறிந்ததே. வாயில் ஜலம் விட்டு சூரியனுக்கு எதிரே துப்பும் பக்ஷத்தில் வானவில்கள் போன்ற உருவங்கள் தோன்றுவது பிரத்தியக்ஷம். நாம் வஸ்திரம் சுத்திபண்ணுங்காலத்தில் கல்லில் ஓங்கி அடிக்கையில் ஜலத்துளிகள் சிதறுங்காலத்தில் வானவில்லுகள் தோன்றுவதும் சகசம். சினிமிடோகிராப் காட்சியில் (அதாவது வஸ்துக்கள் உண்மையில் இயங்குவனபோல் உயிர்ப்பித்துக்காட்டும் படங்களைக்கொண்டு காட்டும் காட்சி) கண்ணின் ஆதாரமாகக்கொண்டு நடமாடும் வஸ்துக்களின் பல நிலைமைகளின் புகைப்படமெடுத்து அவைகளைச்சக்கிரத்தில் வைத்து விரைவாக அத

னைச்சுற்றி, ஒருதுவாரத்தின் வழி பார்த்தால் பின்னம் பின்னமாய்ப் புகைப்படங்கள் ஏற்பட்டிருக்கின்ற ஒரு வஸ்துவின் பல அவயவங்கள் கண்ணின் சக்தியால் ஒன்று சேர்க்கப்பட்டும் பலவிதமாயும் இயங்கும் வண்ணம் நாம் பார்க்கிறோம். இன்னும் அநேக வித்தைகளில் ஷை கண்ணின் சக்தியைப் பிரயோகித்து விசித்திரமான வேடிக்கைகள் செய்கிறார்கள். இந்த வானவில்லின் தோற்றத்தைக் காசிமாநகரில் வேணுகாவனத்தில் பகவான் கௌதமபுத்தர் சிலசீஷர்களுடன் சம்பாஷணை பண்ணுங்கால் "சம்சாரமென்று ஒரு பிரவாகம் இந்த வானவில் தோற்றத்தைப்போல" என்று திருவாய் மலர்ந்தருளினார். 'ஜலத்துளிகளின் பிரவாகம் ஓடிக்கொண்டிருக்க வானவில்லினது நிலைமை சத்தியம் போல் எப்படித்தோன்றுகிறதோ அப்படியேபிரபஞ்சம் என்ற பிரவாகமானது தோன்றியும் மறைந்தும் தோன்றியும்மறைந்தும் ஓடிக்கொண்டிருக்க நிலைத்திருக்கிறதுபோல் நாமும் எண்ணுகிறோம்.—விவேகபாநு.

---

## சுகுணசுந்தரம்.

---

### XI.

தானம் வாங்கவந்த அந்தணர் காணாமற்போகவே சுந்தர சுகுணர்களுடைய சிரங்களும், உடல்களும் ஜ்யோதிஸ்ஸுடன் ஐக்கியமாய்ப் போனதைப் பார்த்துக் கொண்டிருந்த மன்னர்களும், அரசிளங்குமரர்களும், மற்றுமுள்ளவர்களும் அத்யாச்சரிய முற்றவர்களாய் மயங்கித் திகைத்தனர். சுந்தர ராஜனுடைய பித்ரு பக்தியையும், மனஉறுதியையும் அளவிடற்பால தன்றெனக்கண்டு வியப்படைந்தனர். அவ்விளவரசன் இவ்வுலக வின்பங்களை யெல்லாந் துறந்து, தன்னைமறந்து, ஆசாபாசங்களை யொழித்துக், கட்டழகியாம் பிராணநாயகி சுலோசனையையுங் கொஞ்சமு நினையாமல், பிதாவின் மொழியை சத்திய மொழியாக்குதலே சிறந்த கருமமெனவும்; சிநேகதர்மத்தை மெய்ப்பிப்பான் கருதி சிரத்தைக் கொடுத்து ஆன்மாவைத் தன்னுடலத்தினின்று மோடச் செய்து உத்தமகுணஞ் வாய்க்கப் பெற்றவனும், தோழனுமான சுகுணன் சென்றவழியே தானுஞ் செல்வான் கருதி, உடன்கையிற்றானே தன் சிரத்தையும் அந்தணர் விருப்பத்தின்படி கொய்து கொடுக்குமாறு தன் பெற்றோர்களைவேண்டிக்கொண்டபடி வானுலகடைந்ததற்குச் சாதுக்கள் அவனது மனவன்மைக்குக் களித்தனர். மற்றோர் மனமுருகித் தவித்தனர். அந்நகரவாசிகளோ மிகவுந் துயருற்றனர்.

அமைச்சராம் சுமந்தாருடைய இராஜவிசுவாஸத்தையும், சுகுணசுந்தரர்களுடைய சிநேக தர்மத்தையும், பரஸ்பரவாற்சல்யத்தையும் பலவாறு புகழ்ந்து கொண்டாடினர். சுசீல சக்கரவர்த்தியின் புத்ரவாஞ்சையையும், மன உருக்கத்தையும், சத்தியந்தவாமையையும் சாருமதி தேவியாரின், பதிபக்தியையும் மெச்சினர். இனி நிகழ்வதென்கொலோ வென்றுவறித்தனர்.

மங்கையர்க்கரசியாம் சுலோசனை இச்சம்பவங்களைக் கேட்டும், தன்னாசைக்குகந்த நேசனான கண்ணாளனைத் துறந்தும், இவ்வுலகவாழ்க்கையை வெறுக்காதென் செய்கிற்பாள்? உருர்மாய்ப்பள்; திண்ணம் திண்ணம்!! என்றோலமிட்டனர் அந்நகரிலுள்ள பெண்பாலோர்கள் பலர். அந்த காந்தாமணியானவள் தினந்தோறும் பூசித்துவந்த அம்பாள் கிருபை புரியாதிராள் என்று தேறினர் சிலர்; சாருதத்த மகாராஜா தன்னருந்தவச் செல்வியை வேறு இளம் இராஜகுமாரனுக்கு பாணிக்கிரகணஞ் செய்யத்துணிந்து யத்தனிப்பானாயினும் அந்தக் கன்னிகாமணியானவள் மாரசுகுமாரனான சுந்தரஇளவலையின்றி இதரபுமானைக் கண்ணெடுத்தும்பாராளே! உத்தமி!! என்றிவ்வாறாகப் பலவிதமாய்க் கதறிப் பரிதபித்தனர்.

சுசீலபூபதியோ அந்தணர் மனோரதத்தை நிறைவேற்றுவதற்கில்லாமல் போனதைப்பற்றி மனம் வருந்தி யேங்கித்திகைத்து சுந்தர சுகுணர்களைக் காணாமற் பதைபதைத்து மெய்மறந்தன ராயினர். உத்தமியாம் அவருடைய பத்நியோ, அவரைத் தன்மீது சாத்திக்கொண்டு சைத்யோபசாரங்கள் பல புரிந்தன ராயினர். சுமந்தரர் ஞாநியாதலால், மனவன்மையைக் கைவிடாது இஃதேதோ ஈசுவர சோதனையாமென சக்கிரவர்த்தியைப் பலவிதங்களிற் றேற்றின ராயினர். ஹேமாபுரிக் கதிபனோ இக்கோரங்களைக் கண்ணாற் பார்க்கச் சகியாதவனாய் அந்தப் புறஞ்சென்று தேவிமனோரமையுடன் நிகழ்ந்தனவற்றைச் சொல்லிச்சொல்லி இருவருமிக்க துன்பக்கடலி லாழ்ந்தனராயினர். இதுநிற்க.

மதனவஸ்தையினல் ஒவ்வொரு வினடியையும் ஒவ்வொரு யுகமாய்க்கழித்து வந்த இராஜபுத்திரியான சுலோசனாதேவியானவள் சுகுணசுந்தரர்களுடைய வரவைக்கேட்டொரும் ஆனந்தங்கொண்டாலும்,கொஞ்ச மனம் வருந்தினவள்போல் காணப்பட்டாள்; ஆயினும் அவள் அன்றைய தினமும், தான் தினம் பூசித்துவந்த அம்பாளை யுபாசிக்கக் கருதினவளாய்த் தன்றோழி மரகதம், காமபாலனுடைய குமாரியும் சுகுணனுடைய பிரிய நாயகியுமான சம்பகாவதி, இவ்விருவரையு மழைத்துக்கொண்டு நந்தவனஞ்சென்றனள்; பராசக்தியின் அருளால் தனக்கு பர்த்தாவாகக்கிடைக்கப்பெற்ற சுந்தரனை இராஜசபையில் பயிரங்கமாய் மாலையிடுவதற்கு முன்னமேயே பராசக்தியையுபாசித்துத்திரும்பிவர எண்ணி அவள் சென்றனள். சுலோசனையின் குறிப்பையறிந்த சம்பகாவதியும் ஸ்ரீவித்யா உபாஸனை செய்பவளாதலால் தானும் அவ்வாறு செய்ய இராஜ கன்னிகையுடன் சென்றனள். செல்லும்போதே சம்பகாவதி தன்னுடைய வலதுகண் துடிப்பதைக்கண்டு திடுக்கிட்டு "அடி சுந்தரி, சுலோசனே! என்றுமில்லாமல் இன்று ஏதோ என்னுடைய வலதுகண் துடிக்கிறதே! இதுவரையில் எனக்குற்ற இடுக்கண்கள் போதாதென்று இன்னு மெனக்குச் சம்பவிக்கப்போகும் துர்க்குறிக்கு இது ஓர் அறிகுறிபோலும்" என்றாள். சுலோசனையும் அப்போது 'அடி, கண்ணே சம்பகம்! எனக்கு இரவில் உறக்கமில்லாமல் பஞ்சணையில் புரண்டு கொண்டே யிருந்தேன்; சிற்சிலநேரம் கண்களை மாத்திரம் மூடிக்கொண்டிருந்திருக்கலாம்; சுகுண சுந்தரர்களிருவரும் தைலாப்பியஞ்ஞனம் பண்ணிகொண்டு நின்றதாய்க்கண்டேன்; உடனே கண்களை விழித்துக்கொண்டு திடுக்கிட்டேன். விழித்ததும் அவ்விருவரையுங் கண்டேனில்லை. இஃது ஓர் துர்க்குறியை முந்தியே தெரிவிக்கும் கெட்ட கனவல்லவோடி!?" என, சம்பகாவதி, "அடி நீ உறக்கங் கொள்ளாமல் கனவுகண்டதாய்ச் சொல்லுவ தென்னையோ?"

மரகதம்:—"அடி அம்மா சம்பகம்! சுலோசனைக்கிரவில் உறக்கமில்லை; அருணோதயகாலத்தில் கொஞ்சங்கண்ணயர்ந்தனளென்றே சொல்லலாம்."

சுலோசனை:—"நான்தான் சொன்னேனே, சரியான நித்திரையில்லை, விடியலில் கொஞ்சங் கண்ணயர்ந்தேன் என்று; அக்காலத்தில்தான் கனவு கண்டிருக்கலாம்."

சம்பகாவதி:—அடி அம்மா சுலோசனே! இராத்திரி நான்காம் ஜாமத்தில் காணும் கனவுகள் உடனுக்குடனே பலிப்பதாய்ச் சொல்லக் கேட்டிருக்கிறேன்; நீ கண்ட கனவு கெடுதலே."

மரகதம்:—நந்தோழி சுலோசனை கனவு கண்டதாகவே தீர்மானித்தனையோடி சம்பகம்! அவள் கனவுகண்டதாய்ச் சொல்வது பிசகு; ஏனெனில், நான் சொல்வதை நிதானித்துக்கேள். நம்ம சுலோசனைக்கு சுந்தரராஜன் மீதுள்ள ஆசை மிகுதியால் இரவெல்லாம் அவரையே நினைத்துப் பிதற்றிக் கொண்டிருந்தனள்; அந்நினைவால்————." என்று குறையுஞ் சொல்வதற்குள் சுலோசனை கொஞ்சம் வெட்கி, அவளைக் கடிந்து, "அடி மரகதம்! அது உன்னினைவு. இதுதானா பரிகசிக்குஞ் சமயம்;" என்று படபடத்து மொழிந்தனள்.

மரகதம்:—"நான் ஒன்றும் பரிகசிக்கவில்லையடியம்மா! உள்ளதைச்சொல்லி உங்களுடைய மனதிலுற்ற சந்தேகத்தை நிவர்த்திசெய்யத் துணிந்தேன். நீ கடிந்து மொழிவையேல் நான் ஒன்றுஞ் சொல்லவில்லை."

சம்பகாவதி:—"அடி, அம்மா தோழி சுலோசனே! மரகதம் குறையுஞ் சொல்லட்டுமே. அதற்குள் நீ ஏன் கடிந்து மொழிகிறாய்?" என்று மரகதத்தைப்பார்த்து, "அடி சகி! நீ குறையுஞ் சொல்லடி கண்ணே!" என்றதும், மரகதம், இராகுவினல் பிடிக்கப்பட்ட சந்திரனைப் போன்ற ஒளி குன்றிய சுலோசனையின் முகத்தைப் பார்த்தனள். இராஜபுத்திரியோ, சம்பகாவதியின் மொழியைக்கேட்டும் மௌனமாய் நிலத்தைப் பார்த்தவண்ணம் தலை குனிந்தபடி நின்றனள். அப்போது மரகதம், தான் முன் சொல்லவந்ததைக் குறையுஞ் சொல்லுவாளாயினள். "அடி சம்பகாவதி! — அன்னினைவால் ஏதோ அவர்கள் (சுகுண சுந்தரகள்) அப்பியஞ்ஞனஸ்நாஞ்செய்வதுபோல் இவளுக்கு (சுலோசனைக்கு) சுட்

கூத்துக்காக்ஷி—The Miraculous working of the First Principle: Its first perception by the released soul an unspeakable Joy and Wonder.

20. நன்றிதுஆட்டம் நன்றிதுகூத்து நன்றுநன்றிதுநடனம்
அங்குமிங்குமெங்குங்கண்டிலே னிதுவொருவதிசயங்காண்மினோ
ஒன்றிநின்றன் றுணர்வழிந்துள்ளொளி யானபின்
அங்குமிங்குமெங்குமிதுவலால் மற்றொருஅதிசயம்காண்கிலேனே.

எங்குமதுவே—It is Universal and All-pervading.

21. காண்கிலேனதிசயங்காக்ஷியும்வேறிலை துன்பமுந்துக்கமு மின்பசுகமெலாம்
ஆண்பெண்அதுவென அவதரித்தனவெல்லாம் அவன்திருவருட்கூத்தாம்
ஆண்பெண்அனைத்தையும் ஆக்கியழித்துக் காப்பதவன்தொழில்
மாண்பெறுதகையனும் மாயவன்கருணையையுணர்ந்துமுணர்கிலாருளரே.

உலகறியா—Beyond the ken of the worldly-minded.

22. ஊனரேயாமவர் உளக்கண்ணொளியிலாத் தன்மையினர்
கூனரேயாமவர் கூன்விட்டுவானோக்கு வகையறியாவன்மையினர்
கூனரும்கூனரும் குனிந்தபடிவானோக்கக் கூடினதொக்குமே
ஊனருமூனருமொன்றுபட் டுலகறியாமாயனைக் காண்டிடுமென்னலும்.

தேசிகன்தேவை—A Sanctified Spiritual Teacher-Essential.

23. காண்டிடுமென்பார்காயத்தைவதைத்திடுவருள்மர்மமுணராதே
ஆண்டியாய்வேடம்போட் டலைந்திடுவார் அகந்தூயாதே
ஆண்டிடுந்தேசிகனடிபணிந்தருட்கண்பெற்றாரேல்
ஆண்டியாய்மாண்டுபிறவாதவரம்பெற்றுய்வாரே.

உய்வழி—Means of Salvation.

24 உய்யாரேயவருள்ளன்புண்மையில் வையாரேல்
உய்யாரேயவருள்ளுணர்தேசிகன்உளக்கண்ணளியானேல்
உய்யாரேயவருள்மலம்நீக்கியுள்ளத்தமாரேல்
உய்யாரேயவருள்ளத்தமர்ந்துள்ளுணர்ச்சோதியையோராரேல்.

ஆராய்ச்சிமுறை—Aids to Success.

25. ஓராரேயவருடல்பொருளாவியி னசையொழியாதே
ஓராரேயவருணர்வொழியா திருவினையறுத்திடு மர்மம்
ஓராரேயவர்சத்தியாசத்திய நிலையறிசாதனமின்றி
ஓராரேயவருணர்வற்ற வுத்தமசித்தர்தம்வாசனையின்றியே

அநுபவசித்தி—Realisation.

26. இன்றியேபோகுமவர்க்ககத்திலுள்ள துன்பமெல்லாம்
ஒன்றியேதானமர்ந்ததன்மையினற் சகசநிலைசித்திபெற்றால்
நன்றியேசெய்வார்நாடெலாம்காத்துக் கார்முகிலொப்பார்
ஒன்றியேயுள்ளத்தருவாயிருந்தவருலகையுமாட்டிவைப்பாரே.

அர்ப்பணம்—Dedication—To Ripe Souls thirsting for Realisation.

27. தில்லைவாழந்தணர்தம்தேசிகனும்தாசன்பார்த்து
எல்லையிலா வானந்தநடம்பார்ப்பான் பாரினின்று
தில்லைவரும்பக்தர்கள் பரிபக்குவர்பலருமுய்யப் பரிவுகூர்ந்து
எல்லையிலாக்கருணைநிறைசிவகாமியம்மைஏதமறவழங்குகவென்றேவினளே.

ஓம்தத்ஸத்.

சுபமஸ்து.

## ஓம் நமோநம:

"அபிவாதயே பார்க்கவ வீதஹவ்ய ஸாவேதஸ த்ரிகுணதிர ப்ரவரான்வித-அவதூதகோத்ர: ஆபத் பாந்தவ-சூத்ர: சதுர்வேதஸத்புருஷ: ஸத்தியாநந்த: சாந்தசர்மாநாமாஹமஸ்மிபோ."

காயேநவாசாமநஸேந்திரியைர்வா புத்தியாத்மநாவா ப்ரக்ருதே: ஸ்வபாவாத், கரோமி யத்யத்ஸகலம்பரஸ்மை நாராயணாயேதி ஸமர்ப்பயாமி.—சிவசிவ-சிவசிவசிவ-.

"அஹமஸ்மி பரச்சாஸ்மி ப்ரஹ்மாஸ்மி ப்ரபவோஸ்மியஹம். ஸர்வலோககுருச்சாஸ்மி சர்வலோகோஸ்மி ஸோஸ்மியஹம். அஹமேவாஸ்மி ஸித்தோஸ்மி சுத்தோஸ்மி பரமோஸ்மியஹம். அஹமஸ்மி ஸதாஸோஸ்மி நித்யோஸ்மி விமலோஸ்மியஹம். விஜ்ஞானோஸ்மி விசேஷோஸ்மி ஸோமோஸ்மி ஸகலோஸ்மியஹம் . . . ஸர்வதாஸமரூபோஸ்மி சாந்தோஸ்மி புருஷோத்தம: ஏவம்ஸ்வாநுபவோயஸ்ய ஸோஹமஸ்மிநஸம்சய: ய:ச்ருணோதி ஸக்ருத்வாபி ப்ரஹ்மைவபவதிஸ்வயம்." மைத்திரேயோபநிஷத்-3-வது அத்தியாயம்.

---

## பராபரன் கோர்ட்டில் தாக்கலான புராதன வழக்குக்கு தீர்ப்பு.

சாத்விக்கிரோமணி - மாயாண்டிப் பிள்ளை நயக்குப் பின்வருமாறுஎழுதுகிறார்:—

அந்தஹு வந்தமீ இந்தத்தேதியில் ஆத்மநாதன் கொடுத்த பிரியாது பராபரன் கோர்ட்டில் விசாரணையாகி முடிவானதாக என் தயாரிடமிருந்து கடிதம் வந்துளது. அதில் தீர்ப்பு சுருக்கமாயெழுதப்பட்டிருக்கிறது. அதில் கண்டபடி விடவேண்டியவைகளை விட்டுக்கொடுக்க வேண்டியவைகளைக் கொடுத்தால் கிறைவேற்றுமனு அங்கிகரிக்கப்படும். இம்மி குறைந்தாலும் பிசகினாலும் அனுபவபாத்தியம் கிட்டாது. இதை உலகறிய உங்கள் பத்திரிகையில் பிரசுரித்து வாதி ஆத்மநாதனுக்கும் அவனைப்போலொத்தவர்களுக்கும் தெரிவிக்கக்கேட்டுக் கொள்கிறேன். திருவாதிபிலுறையுமென் தாய் பின்வருமாறு எழுதியிருக்கிறாள்:—

"குழந்தை சா - மா - க்கு நித்யானந்தமுண்டாகுக. உன் கடிதமும் பேபரும் பார்த்தேன். பிரியாதுக்குத் தீர்ப்பு சுருக்கமா யெழுதப்பட்டிருக்கிறது:—

### பராபரன் கோர்ட்டில்

பாரிஜட்ஜ் அகண்டானந்தலேகூஷியதேசிகன் முன்னிலையில்.

தீர்ப்பின் சுருக்கம்:—"வாதி ஓர் நிலையாய் உரைப்பதாலும் வாதியின் சாக்ஷிகள் ஒரேசொல்லாயுரைப்பதாலும் ஞானபூமியானது வாதியுடையதென்றே தீர்மானிக்கப்படுகிறது. ஆகிலும் வாதியின் காணி வாதியால் வெகுநாளாகக் கவனிக்கப்படாமலும், தனதல்லாததான உடல்பொருளாவியைத்தனதாகப் பாவித்து அதனிடத்தில் நிதானம் வைத்திருந்ததால் அக்ஞான குளமான தரிசு பிரதிவாதிகளால் அனுபவிக்கப்பட்டுவந்து விட்டது. அனுபவபாத்தியதைக்காக, வாதியால் இதுவரை சேகரிக்கப்பட்ட புண்ணியபாவ சங்கல்பாதிகளை அறவேகொடுத்தால் பிரதிவாதி யொவ்வொருவனும் இருந்தவிடந் தெரியாமல் போவான். தனதல்லாததான உடல் பொருளாவியையும் நியாதிபதியாகிய ஸர்க்காருக்கு ஒப்பித்துவிடவேண்டுமென்று வாதிபக்ஷம் தீர்ப்பு.

இந்தஹு இந்தமீ இந்தத்தேதி, திரு ஆதியில் பிரணவ முத்திரை போட்டுக்கொடுக்கபபட்டது.

(ஒப்பம்) அகண்டானந்த லெக்ஷியதேசிகன்,
பராபரன்கோர்ட்டு பாரிஜட்ஜ்.

ஓம்.

கடப்பதற்கு ஸமுஸாரமென்னும் வண்டியைக் கொண்டு அகமுடையான் பெண்சாதி யென்னும் இரண்டு எருதுகள் இழுத்துச் செல்லுகின்றன, அவைகளிரண்டும் நேசத்துடனிழுத்துச் சென்றால் சுகமாய் ஊர் போய்ச்சேரும். அப்படிக்கின்றி ஒன்று தெற்கே போனால் ஒன்று வடக்கே சென்று ஒன்றை மற்றொன்று விரோதித்து இளைத்ததை பலத்தது முட்டி மோதி காயப்படுத்தி இரண்டும் உருண்டு புரண்டு அருகிலிருக்கும் சாக்கடையில் விழுமாகில் அதன் கதியென்ன? தன்னையும் நாசப்படுத்தி வண்டியையும் உடைத்து வண்டியிலிருக்கும் பதார்த்தங்களையும் சேதமாக்குமல்லவா? அதுபோலவே தான் சமுசாரம், அன்பொன்றில்லாவிடில் ஒன்றும் நடக்காது. ஓ வேதியரே தருமத்தின் நுட்பம் உமக்குத் தெரியவில்லை. உமக்கு விஸ்தாரமாய்த் தெரிய வேண்டுமானால், மிதிலாபுரியில் தருமவியாதரென்னும் வேடரொருவர் இருக்கின்றார். அவரிடம் சென்று வேண்டியதைத் தெரிந்து கொள்ளலாமென்று சொல்லி தான் காக்கவைத்த தப்பிதத்தையும் பொறுக்கும்படி வேண்டிக் கொண்டாள். இவைகளை யெல்லாம் அவ்வந்தணன் கேட்டு பிரமித்து நின்று நாம் வனத்தில் கொக்கை நீராக்கினதையும் அறிந்திருக்கிறாளே இவளல்லவோ பதிவிரதை யென்று மனதில் மதித்து அவளைப் பார்த்து 'அம்மணீ! நான் அறியாமையினால் சொன்ன வார்த்தைகளைப் பொருத்தருளல் வேண்டு'மென்று சொல்லி மிதிலாபுரம் நோக்கிச் சென்றார். அவ்வூரில் அப்பெண்மணி சொன்னதைப் போலவே ஒரு ஞானியான வேடனிருக்கக் கண்டு அவனிடம் உபதேசமடைந்து தன்னை யனுப்பிய ஸ்திரீயின் பதிவிரதா தர்மத்தின் மகிமையைப் புகழ்ந்து இவளைப்போல் விரதசீலிகள் யாரிருக்கிறார்களென்று மதித்து, ஊருக்கு வந்து நற்குலத்துப் பெண்ணை விவாகம் செய்து கொண்டு தாய் தந்தையர்களை உபசரித்து கிரகஸ்தாச்சிரம தர்மத்தை வழுவிலாமல் நிறைவேற்றி வந்தார்.

The MADRAS MAIL of 20th Oct. says:—

THE “VIVEKA CHINTAMANI.”

“This high-class Tamil periodical entered upon the twelfth year of its existence a few months ago, and it has done much good work during this period to deserve the support of the Indian community. Mr. C. V. Swaminatha Iyer, its editor, has through his unaided exertions, brought the magazine to a high degree of literary merit. During the last year he has made religious philosophy a special feature of the journal and has contributed to its pages devotional writings particularly interesting to Hindu ladies. He is about to issue a collection of philosophic poems in easy Tamil, popularising the teachings of the Advaita school.”

The *Hindu* (Nov. 5.) remarks: “The Journal aims at supplying the crying need in the present one sided secular education by emphasizing the spiritual side of man's growth and stimulating enquiry and thought in that line on principles which are of universal application.”

## Terms of Subscription to the ‘Viveka Chintamani.’

**Thick Paper Edition** for Patrons, Reading Rooms, School and Circulating Libraries, &c.

Minimum Subscription Rs. 5 per annum.

Single Copy 7½ As. : Back Nos. 8 As. each.

**English & Foreign Subscription 7s. 6d. net per annum.**

**Thin Paper Edition** for the People :—

**Subscrn. Price: Yearly Rs. 4; Half-yearly Rs. 2-2.**

**Single copy, current No. 5½ As.; Back Nos. 6 As. Each.**

**English & Foreign Subscription 5s 6d. net per annum.**

**If strictly Prepaid** at the commencement of the term, (*i.e.*, in May of each year) 8 As. discount, off the annual rate, and 4 As, off the half-yearly rate.

Subscriptions entered to begin with only April or May of each year. Enrolled Subscribers may not withdraw except at the end of the year

☞ To regular annual subscribers 2 months grace is allowed for the prepayment of subscription, and in the case of regular half-yearly subscribers 3 weeks' time, within which all subscriptions should be paid to entitle them to the discounts allowed.

Subscriptions cannot be closed in the middle of a *Volume,* though regular subscribers may elect to pay their subscriptions in half-yearly instalments. *All notices for discontinuance are to be given in the beginning of the new year, i. e., in April or May; for otherwise one should have to pay for the whole of the current volume.* Outstanding subscriptions are often realised by V. P. P to prevent accumulation of arrears.

In all business correspondence, Subscribers are requested to quote their register number found on the wrapper, as it would ensure prompt attention and avoid vexatious delay and needless correspondence.

## விவேகசிந்தாமணி சந்தாவிவரம்’.

**தளமான காகிதப்பதிப்பு:**— அத்தியக்ஷர்கள், ரீடிங்ரூம்கள், புத்தகசாலைகள் முதலான ஸ்தாபனங்களுக்கு உபயோகமானது. ☞ வருஷ சந்தா குறைந்தது ரூ. 5. தனிப்பிரதி 7½ அணா. பழைய பிரதி 8 அணா.

லேசான காகிதப்பதிப்பு:—சாதாரணமாய் எல்லா ஜனங்களுக்கும் உபயோகமானது.

வருஷசந்தா ரூ. 4. 6-மாசத்துக்கு ரூ. 2-2.
தனிப்பிரதி 5½ அணா. பழைய பிரதி 6 அணா.

வருஷாரம்பத்திலே (அதாவது மேமாசத்தில்) தவறாமல் கட்டினால் வருஷசந்தாவில் 8 அணாவும், 6-மாச சந்தாவில் 4 அணாவும் தள்ளிக்கொடுக்கப்படும்.

ஏப்பிரல் அல்லது மேமாதம் துவக்கியே சந்தாக்கணக்கு வைக்கப்படும். ரிஜிஸ்தரான சந்தா தாரர்கள் வருஷமுடிவிலன்றி மற்றப்படி சந்தாவை நிறுத்துதல் கூடாது.

வருஷக்கணக்காக ஒழுங்காய்ச் சந்தாசெலுத்திவருகிறவர்களுக்கு இரண்டு மாசத்தவணையும், 6-மாசக்கணக்காக ஒழுங்காய்ச்சந்தா செலுத்திவருகிறவர்களுக்கு மூன்று வாரத்தவணையும் கொடுக்கப்படும். அதற்குள் சந்தாவை முன்பணமாகச் செலுத்துகிறவர்களுக்கே மேற்கண்ட தள்ளுபடி செய்து கொடுக்கப்படும்.

பத்திரிகையை வருஷமத்தியில் நிறுத்தக்கூடாது. நிறுத்தவிரும்புகிறவர்கள் வருஷாரம்பத்தில் நோட்டீஸ் கொடுக்கவேண்டும்; அப்படிக்கின்றி மத்தியில் நிறுத்தினால் அந்தவருஷ முழுவதற்குமுள்ள சந்தாவைச் செலுத்திவிடவேண்டும். சந்தாபாக்கிகள் V. P. P. மூலமாக வசூல்செய்யப்படும்.

கையொப்பக்காரர்கள் ஆபீசுக்குக் கடிதமெழுதும் போதெல்லாம் அவர்கள் ரிஜ்ஸ்தர் நம்பரைக் குறிப்பிட்டெழுதவேண்டும். அப்படிச்செய்வதால் அவர்கள் எழுதும் கடிதம் உடனே கவனிக்கப்படுவதன்றி அதிக தாமதத்துக்கும் வீண் கடிதப்போக்கு வரவுக்கும் இடமிராது.